உ

கணபதிதுணை.



சங்கராசாரியர் சிவானந்தலகரியைத்தன்னுட்கோ

# சோமசுந்தரமாலை

சிவபுஜங்க தேவிபுஜங்கங் களைத்தன்னுட்கொண்ட

# வேதவனேச ஸ்தவ

இவை

தேவிகோட்டை

ஸ்ரீ வன்றொண்டரவர்கள் மாணாக்கருளொருவராகிய

காரைக்குடி

ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியாரவர்களால்

இயற்றப்பெற்று

தேவிகோட்டை

ஸ்ரீமான் மே. அரு. நா. ராமநாதச் செட்டியாரவர்களால்

1917

காரைக்குடி வைசியமித்திரன் பிராஞ்சு பிரஸில்

அச்சிடப்பெற்றது.

பிங்கள௵ ஆவணிமீ.

# சிறப்புப்பாயிரம்.

குலசேகரம்பட்டணம்

எம். எஸ். வயிரவநாதபிள்ளையவர்கள் இயற்றியது.

திருவரு ளுடன்சார் சிவன்மண மலர்போன்
மருவி நிறைந்து மறைந்து வயக்கிப்
பந்தமா ருயிரெலாம் பாசநீத் துய்வான்
தொழில் புரிந்தாங் கருள்பெருங் கருணையன்
வன் சொரூப மாரு முணர்கிலர்
னருளான் மொழிகுநர் சிலரே
ணிறைந்திவா ழன்பின ரொருவன்
ச் சார்ந்த தகுதிய னேனைப்
கங்கள் பகர்பொருண் மறுத்துச்
கம்மே தாபிக்கு நேயன்
றுஞ்செய் சிவார்ச்சன சீலன்
கப் பூசிக்கு மமையங் கண்டனன்
மனமுங் குழைந்த தெனக்கெனில்
கொளு மவன்சீர் வகுப்பவர் யாரே
ற் றியநூ லெண்ணில முன்னர்
சார்ந்து திகழ்சங் கரர்சொல்
ர்ந்த லகரி சிவனுமை புயங்கக்
த்தமைத் தவர்தஞ் சரித்திரம் விளக்கி
மருத்துறழ் சோம சுந்தர மாலையும்
வேதவனேச தவமும் விழுப் பொருள்
ஆதிரன் றெலாமுற வாக்கின னவனே
சீரெலா நிறைந்த காரைமா நகரினன்
தூயசீர்த் தேவைவன் றொண்டர்மா ணக்கன்
ஆயசொக் கலிங் ம்பெருந் தவத்தினன்
இத்துணை நூ ளிதுணர்ந் துய்வான்
மெய்த்தகு வி ன் வெளிவரச் செய்தனன்
இருவே றுலகத் தியற்கையென் பதைமறுத்
தருள்வாய்த் திலங்கு மழகன் குழகன்
தனதனிற் சிறந்த வனகிதிப் பெருக்கங்
கனகனிற் சிறந்த கல்விசற் குணமுதற்
றுனே நிறைந்த சைவசித் தாந்தி
மேனு ஆனு ருனு நாவன்னு
ராம நாத ந ரந்திர னவனே.

உ

# முகவுரை.

சோமசுந்தரமாலை யென்னும் இந்நூல், "முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி" என்னுந் தெய்வச்சுருதியைச் சிரமேற்கொண்டு "பொன்னெடுமேரு வெள்ளிப்பொருப்பு மந்தரங் கேதாரம், வன்னெடும் புரிசை சூழ்ந்த வாரணவாசியாதிப், பன்னருந்தலங்கடம்மிற் பராபரலிங்கந்தோன்று, முன்னரிக்கடம்பின் மாடே முளைத்திச் சைவலிங்கம்" என்று பரஞ்சோதி முனிவரால் விளக்கப்பெற்றபடி, திருக்கயிலாசாதி சத்தலங்களுக்கு முந்தினதாய், அத்தலங்கள் போல் விராட்புருடனுடைய அவயவங்களுள்ளே யடங்காமல் அதீதமாகிச் சர்வலோகப் பிரசித்த சிவராஜதானியாய் விளங்குகின்ற த்வாதசாந்த ஸ்தலமாகிய மதுராபுரியிலே, அனவரத சாந்நித்தியராய் சதுஸ்ஷஷ்டி லீலானுக்கிரககாராய் வீற்றிருந்தருளுகின்ற ஸ்ரீ சோமசுந்தரப் பெருமான் றிருவடிசமர்ப்பண ஸ்துதிரூபமாக ஒவ்வொரு செய்யுளிலும் ஆதிசங்கராசாரியராற் செய்யப்பெற்ற சிவானந்தலகரி நூறுசுலோகங்களின் வாக்கியார்த்த தாற்பரியங்களை வரிசையாக அமைத்து அச்சங்கரர் சரித்திரங்களையுஞ் சுருக்கிக்காட்டிச் செய்யப்பெற்றது.

சங்கரர் சரிதஞ்சொன்னோர், அவரிடத்துவைத்த அன்புமேலீட்டினால் அவர்க்கு மகிமை கூறுமாசை வயத்தராகிய சிடர்கள் பலர். இவர்கள் கூறுஞ் சங்கர சரித்திர முந்தம்முள் ஒத்தன்வாராமற் பலபேதங்களாயிருக்கின்றன. இதனால் இச்சரித்திரர்கள் முதனூலொன்றிருந்து அதைநோக்கிக்கூறினரல்லர், சங்கரருக்கு மகிமை கூறு மாசைவயத்தராய் நிற்றலாற் பூர்வாபர விரோதாதிகளை நோக்காமல் மனம்போனவாறெல்லாமெழுதிவைத்தாரென்பதினிது விளங்கும். இது நிற்க,

சங்கரர், ஊழ்வலியினாற் பாலியகாலத்திலேயே கல்வியிற் சிறந்தவராய் ஏகான்மவாதக்கோண் மேற்கொண்டு, அதற்கிணங்கவே அனேக நூல்களுஞ்செய்து பற்பல இடங்களுஞ்சென்று வாதாடி அக்கேவலாத்துவிதமே விளக்கி வந்தாராயினும், பின்பு ஸ்ரீ நீலகண்டசிவாசாரியரை யடுத்து, மற்றெம்மதங்களையுந் தன்கீழ்ச்சோபான மாகக்கொண்டு அதீதமாய் வேதாந்தசாரமாய் விளங்குவது சுத்தாத்துவித சித்தாந்த சைவமே யென்னுமுண்மை யுணர்ந்து சிவதீக்ஷாதி பெற்றுச் சிவாகம விதிப்படி சந்திரமௌளீச பூசனையிடையறாது செய்துவந்த சைவராதலால், நம்மவர்களாகிய சைவர்களால் நமது சைவப்பெரியோர்களிலொருவராக மேற்கொள்ளப் பெற்றவரென்பதேனமதுகருத்து. சங்கரர் பின்னின்ற* சைவநிலையும் அநுட்டானமும் நோக்குவார்க்கு, அவர்முன்கொண்ட† நிலையை அறவே விட்டொழிந்தாரென்பதினிது விளங்கும். மேலும் அவர் பின் செய்த நூல்களாலுந் துணியப்பெறும். அவர் முன் வேறுநூல் வழிகளிற் சென்று காலம் வீணே

* பின்னின்ற சைவநிலை யென்பது ஆன்மாக்கள் முத்திநிலையில் சிவத்துக்கு பின்னிற்றலையுங் குறிக்கும் † முன்கொண்ட நிலை யென்பது ஆன்மாக்கள் பெத்தநிலையில் நாமே பிரமமென முற்பட்டு நிற்றலையுங்குறிக்கும்.

யங்க

கழிந்தனவே யென்று வருந்தியகுறிப்பைச் சிவானந்த லகரி (எ)வது சுலோக முதலியவற்றானும், சிவதீக்ஷையை விரும்பிக் கேட்டுக்கொண்டதை (௨௬)வது சுலோகத்தாலும் சிவாகம விதிப்படியே பூசித்தாரென்பதைச் சிவபுஜங்கத்தில் (௨. ௩.)வது சுலோகங்களாலும் இன்னுமவர் முன் பயின்ற கேவலாத்துவிதிகளை முழுதும் ஒழித்துச் சைவத்தலைவர்களாகிய உண்மை நாயன்மார்களையே துதித்ததையும், முன்புதானே பிரமமெனக்கொண்டு கூறியவாதனை முழுது நீங்கி, நான் சமலபசுவாகிய அடிமையென்றும், பரமசிவனொருவனே விமலபதியாகிய ஆண்டானென்றும், அப்பதி வழிபாடே முத்திசாதனமென்றும் உள்ளபடி துணிந்து வழிபடுதலையும், அந்நூல்களிற் பற்பலசுலோகங்களினும் விளங்கக்காணலாம். இனிச்சங்கர சரிதர்கள் அவர் பின்னின்ற சைவநெறிச்செயல்கள் சிறிதுங் காட்டாமலும், முன்கொண்ட நெறிச்செயலும் பூர்வாபர விரோதமாகவும் பொருந்தாதனவாகவுங் கூறினராதலால், அச்சரித்திரங்களிற் சிலவற்றையெடுத்துக்காட்டி உண்மை விளக்குதற் கெழுந்த பக்கவசனங்கள் நோக்கி நமக்குச் சங்கரரிடத்துப் பிரியமின்றெனக் கொள்ளாருண்மை கடைப்பிடிக்கு முத்தமரென்க. உண்மை நோக்காது விரோதபுத்தியே மேற்கொண்டுணர்வார்க்கு மேலுஞ் சமாதானஞ் சொல்லப்புகுவதனுவசியமென்க. சொல்லினும்பய மின்றென்க.

இச்சங்கர சரிதம் பலவற்றுள்ளே, சங்கரவிஜய விலாசம் சங்கரவிஜய காவியம் முதலிய வற்றிலுள்ள கதைகளைத் தழுவிச் சுருக்கமாகப், பெங்களூர்ச் சுப்பிரமணிய சாஸ்திரிகளுதவிகொண்டு தொழுவூர் உபயகலாநிதி வேலாயுதமுதலியாரால் மொழிபெயர்த்து வெளியிடப்பட்டதென்று முகவுரை எழுதப்பட்டிருக்கிற சரித்திரத்திலே இச்சங்கரசரிதம், கந்தபுராணம் சிவரகசியகண்டம் சிவபுராணாதிகளில், வியாசர் முதலியோராற் கூறப்பட்டதென்ப தாரம்பம். நன்று நன்று; "கண்டனமின்றியாங் கலியின்வண்ணமே" இச்சங்கரரே, அவ்வியாசரனுக்கிரகம்பெற விரும்பி அவரைத்தேடிக்காணாமல் வருந்தினதாகவுங் கூறுகின்றார். வியாசரைத்தேடிக்காணப்பெறாது வருந்தினசங்கரருக்கா அவ்வியாசரே அவருங்கந்தபுராணாதிகளிலே சரித்திரங் கூறினார். இது பொருத்தமாகாதே என்பதை முழுதுமறந்து ஆசைவசப்பட்டுக்கூறிய சரிதர்கூற்றினுண்மை யுணர்வார் உத்தமவிவேகரென்க. பரமேதிகாசமாகிய சிவரகசிய மென்பதை மறந்து கந்தபுராணம் சிவரகசிய கண்டமென்று கூறினதெனில், அச்சிவரகசியத்திற் பரமசிவன் உமாதேவியார்க்கு இனிமேற் கலியில் நமதுபோல் ஒருவன் வந்து துவிதத்தை அத்துவிதமாக நிறுத்துவானென்பனவாதி சிலவாக்கியங்களன்றி வேறில்லையென்றும், அதுவுமிச் சங்கரரைக் கூறியதன்றென்றும் முன்னமே சித்தாந்தரத்நாகர நூலாசிரியர் கூறியுள்ளார். சிலபுராதன சிவரகசியப் பிரதிகளில் இவ்வசனமுமில்லை. இதனுண்மை உற்றுநோக்குங்கால் அக்கொள்கையாரே அவ்வசனங்களைப் பின்பு சேர்த்து வைத்ததாக ஊகித்தற்கிடனாகின்றது. இவ்விதக்கலப்புகள் வேறு சில நூல்களிலுமுள்ளன. இதனை, வான்மீகி (௨௰சதந) [illegible] று கூறிய ராமாயணம் இப்போது அவ்வெண்ணைக்கடந்து வழங்குத

லுஞ் சான்றாகும். சிவன் (நமதுபேரால் ஒருவன்வந்து) என்றதுகொண்டு, அவ்வொருவனென்ற சொல்லுக்கு நீலகண்டசிவாசாரிய ரென்றேன் பொருள்கொள்ளப்படாது. நீலகண்டநாமஞ் சிவநாமமன்றோ? அவர்செய்தது அத்துவித பாஷியமன்றோ? இதனைச் சங்கரரென்றே கோடலெங்ஙனமியையும். ஆசைவயத்தராய்க் கொண்டாலும், எத்தனையோ விஸ்தார அத்தியாயவகைகளாகக்கூறி இவையெல்லாம் கந்தபுராணாதிகளிலுள்ளனவென்றதெப்படி நிலைபெறும். இது போலும் பூர்வாபர விரோதங்கள் பொருந்தாமைகளனேக முள்ளன. அவற்றை விரிப்பிற்பெருகும். சிற்சில பின்வருவன காண்க.

முதலாவது அத்தியாயத்தில், உலகத்திலே சன்மார்க்கங் குறுகுதல்கண்டுதேவரனைவரும் திருக்கயிலை சென்று விண்ணப்பிக்கச், சிவபிரான், விநாயக சுப்பிரமணியவீரபத்திர நந்தியாதியரையும், பிரமவிஷ்ணுவாதி சகலதேவரையும், இச்சங்கரருக்குத்தொண்டு செய்யவே மனிதர்களாகப் பிறக்கும்படி ஆஞ்ஞாபித்தாரென்றும், மூன்றாவது அத்தியாயத்தில் அவர்கள்அப்படியேபிறந்து அவருக்குத் தொண்டுசெய்து வந்தார்களென்றும் உள்ளம்நடுங்காதுரைத்துப், பின் ஒவ்வொரு சமயங்களிற் சங்கரர் தமக்கு வந்த ஆபத்துக்கள் நீக்கும்பொருட்டு அத்தேவர்களிற் பலரைவணங்கி வரம்பெற்றா ரென்றும் பற்பல இடங்களிற் கூறுகின்றார். இரண்டாவது அத்தியாயத்திற் சிவகலையே கருவுற்றுக் கிடந்து சங்கரராய்ப் பிறந்ததாகக்கூறி, அதன்மேற்பரமேசுரன், சர்வசுதந்திரனாய்ச் சச்சிதானந்த சொரூபனாய் எங்குநிறைந்தவனாய் முக்காலத்தும் ஒரே தன்மையனாயுள்ளவனாதலால், அவனுக்குப் பிறவிக்கருமமேது? கருவிற்கிடத்தலேது? பிறப்பேது? பரமேசுரன் பிறந்ததேயில்லை. தன்னிச்சை விளையாட்டால் மாயையே சங்கரராய்ப் பிறந்ததன்றி வேறில்லையென்றுங் கூறுகின்றனர். பின் அதையுமடியோடு மறந்து, சரித்திர முடிவுவரை வருமிடந்தோறும் சிவனே சங்கரராய்ப்பிறந்ததாக**வும்** விளக்குகிறார். இஃதென்ன மயக்கமோ?

இனிச்சங்கரர், பாலியத்திலே ஆசிரியரைத்தேடிச்சென்று வணங்கி அஞ்சலித்தெதிர் நின்றபோது, ஆசிரியர் நீயாரென்று கேட்கச், சச்சிதானந்தவடிவாகிய நான். சிவோகம் என்று கூறினதாக ஐந்தாவது அத்தியாயத்திற் கூறுகின்றார். சிவோகமென்பதே சிவம் நான் என்னும் பொருடருவதறியாது நான்என்று ஒருசொல்மிகை படக்கூறினார். வடிவாகிய நான் என்றது வழுவென்பதும் நோக்கிலர். சங்கரரிப்படிவழுவுறக் கூறாரென்பது புத்திமான்களறிவார்கள். ஆகவே சங்கரர், தமது வழககப்படி அகம் பிரமமென்றுகூறினதாகக் கோடலே யுண்மையாகும். சங்கரர் தமதுகுறைகூறி உபதேசம் பெற விரும்பி வணங்கிநின்ற சமயத்தும் அகம் பிரமமென்னுமெழுச்சியே முன்னிற்குமேல் மற்றிடங்களிற் கூறுவானேன்.

சங்கரர் அகம்பிரமமென்று கூறியதைச், சரிதர் சிவோகமென்று மாற்றியது, அவ்விருவாக்கியங்களுக்கும் பொருளொன்றெனவேகொண்டு, சிவோகமென்றாற் சைவர்களாகிய நமக்குவப்பாகுமென்று கருதியேபோலும். அவ்விரு வாக்கியங்களுந் தம்முள்

மலையிலக்கான வேற்றுமையுடையன வென்பதவரறிந்திலர். அகம் பிரமம் என்பதில்
(அகம்) நான் என்னும் ஆன்மா, ஆணவமுனைப்பால் முற்பட்டு நிற்பப், பிரமம்பிற்பட்டு
நிற்றலால், இது பெத்தநிலையை விளக்கிப் பசுஞானிகள் கூற்றேயாய் நிலைபெறும். சி
வோகம் என்பதில் சிவம் முன்னிற்ப (அகம்) நான் என்னும் ஆன்மா ஆணவமுனைப்பு
முற்றுங் கைவிட்டு அச்சிவத்துள் வியாப்பியமாயடங்கிப் பின்னிற்றலால், இதுபசுத்துவ
நீக்கத்துச் சிவத்துவப் பேறுற்ற முத்திநிலையை விளக்கிச் சீவமுத்த சிவவாக்கியமே
யாய் நிலைபெறும். இவ்விளக்கத்தால், அகம்பிரமம் பெத்தநிலையும் சிவோகம் முத்திநிலை
யும்விளக்குமென்னுமுண்மையையொருபாற்கோடாதஉத்தமபுத்திமான்களுணர்வார்கள்.

இச்சங்கரர், அகம்பிரமம் என்னும் எழுச்சியும் அதற்கே சாதகமாகவாய்ந்தவித்து
வந்திறமையுமுடையராதலால், எவரையும்வென்றுமேம்படக்கருதுமாசையால், அங்கங்
குள்ள அரசர்களைவசப்படுத்தி அவர்களுடன் எங்குஞ்சென்று துணைவலியுங்காட்டி வெ
ல்லுதலும், மிஞ்சியவிடத்து நரசிங்கத்தைஏவிக்கொல்லுதலும், செய்துவந்ததையேதிக்கு
விஜயப்பெருமையாகக் கூறுகின்றசரிதர், பின் பதினாறாவது அத்தியாயத்தில் சங்கரர்,
சபையிலுள்ளபுலவர்களைத் தோல்வியுறச்செய்து அவமானப்படுத்தி வருந்தும்படி நமது
வித்தைசெருக்கினைக்காட்டுவது அதிபாதகமென்றுகூறுகின்ற நான்முறைபற்றி, அபிந
வகுத்தரேவலால் வந்த ரத்தமூலநோயுற்றுவருந்தி, வேறெவ்விதத்தாலுந்தீராமல்எப்போ
தும் அபானத்தாலிரத்தமொழுகுதலின் வஸ்திராதி துர்நாற்றமுஞ்சகியாமல் (நானேபிர
மமெனக்கொண்ட எழுச்சிமுழுதுங்கைவிட்டு நாமெல்லாம் மும்மலப்பசுக்களே, பசுபதி
சிவனொருவனே, இந்தச்சமயம் அவன் அருளினாலன்றிவேறுகதியில்லை யென்னுமுண்
மையைத்துன்பமேலிட்டவழியாலுணர்ந்து, சர்வரோகநிவாரணபதியாகிய) வயித்தியநா
தரைத்துதித்துரோகநீங்கப்பெற்றனர் அதன்பின்னும் அந்நோயை ஏவிய அபிநவகுத்த
னிடைக்கொண்டவிரோதமேலீட்டினால், அச்சங்கரர் சீடராகியபத்மபாதரால் அபிநவகுத்
தர்கொல்லப்பட்டாரென்றுங்கூறுகின்றார்.

இனிச்சங்கரர், மண்டனபண்டிதரை வாதித்துவென்றமை கூறினர். வாதந்தொட
ங்குமுன்னிகழ்ந்த அனாவசியவார்த்தைகள்பல; அவற்றை விரிப்பதாபாசம். அமைக. பி
ன்பு மண்டனர் பத்தினிசரஸ்வதி யென்றுதெரிந்து சத்தியலோகஞ் செல்கின்ற அவளை
மந்திரசெபதியானத்தால் அழைத்தாரென்றும், அவள் வந்துனக்குயாதுவேண்டுமென்று
வினவச், சங்கரர் அத்துவிதமுடிவை நிலைநிறுத்தவேண்டுமென்று வாகீஸ்வரிஸ்தவமெ
ன்றொருநூல் செய்துதுதித்து, என்னம்மேபரதெய்வமாகியதாயேநீஇங்கிருந்தருளிஅடி
யேங்கள்வேண்டுந்தோறுங் காட்சிதந்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, அப்படியே
வரங்கொடுத்தாளென்றுங் கூறியசரிதர், பின்பு அவளையும் வாதித்துவென்றாரென்று
கூறுகின்றார். அந்த வைபவத்தைப்பின்வருவனவற்றாற்காண்க.

எல்லாவித்தைகளுக்கு மூலமான பரமேசுரனாகியசங்கரருக்கும், அவித்தையேவடிவா
கியசரஸ்வதிக்கும் பதினேழுநாள்வாதநடந்ததென்றும், வேதாகமபுராணேதிகாசாதி எல்

லாநூல்களிலுஞ்சங்கரர் அளவற்ற அறிவுடையராயிருந்தாரென்றும், சரஸ்வதிக்குள்ளசந்
தேகங்களெல்லாம் நீங்கினவென்றுங்கூறினர். வணங்கித்துதித்து வரம்பெற்ற சங்கரர்
பரமேசுரனும்; வரங்கொடுத்த சரஸ்வதி அவித்தையாம். இவளுக்கு அவராற்சந்தேகங்கள்
நீங்கினவாம். இந்தஉழறுபடையை விரிப்பானேன். அமைக. பின்புசரஸ்வதிகாமநூலிற்
பலவினாக்கள்வினவச், சங்கரர்விடையின்றித் தலைகுனிந்து யோசித்திருந்து ஒருமாதந்த
வணைகேட்டுச்சென்றாரென்றும், சென்றசந்நியாசியாகிய சங்கரர் பெண்களுடன் கலவி
செய்து தான் காமநூல்விபரம்தெரிய வேண்டுமெனறுநிச்சயித்தாரென்றும், அப்போது
சீடராகியபதுமபாதர் இது உமது ஆச்சிரமவிரோதமாகும், மாதர்கலவி மீளவிடாது பழி
பாவத்துக்கிடமாகும், உம்மைப்பார்த்து மனந்துணிந்து இத்தீயநெறியொழுகி மற்றவர்
களுங்கெட்டுப்போவார்களென்று, முன்புமாதர்மயக்கத்தாற் கெட்டசிலகதைகளும் கூறி
மறுத்தாரென்றும், அதுகேட்டசங்கரர், அகம்பிரமஞானியாகியஎனக்குபுண்ணியபாவஞ்
சுவர்க்கநரகமுதலான ஒன்றுமில்லை; நான்எதுசெய்யினும் பாதகமாகாது; இவ்வுடம்புட
னேயே மாதர்கலவிசெய்யினுங் குற்றமாகாது; ஆயினுஞ்சான்றோரொழுக் கம்பற்றிச்சந்
நியாசவிரதபங்கம்வராமல் வேறுடம்புகொண்டு மாதர் கலவிசெய்வேனென்று சிலகதை
களுங் கூறிமறுத்துவிட்டு, அந்தச்சமயம் இறந்துகிடந்த அமரகனென்னு மரசனுடலிற்
பிரவேசித்து, அரசனுயிர்பெற்றெழுந்தானென்றுயாவருங்கொண்டாடும்படி வஞ்சித்து
நின்று, அவ்வரசன்பத்தினிகள் நூற்றுவருடன்சதாகலந்து போகித்து, அக்காமத்தின்
முழுகிநின்றமைதெரிய அமரகம்என்றொருகாமநூல்செய்து, அந்தப்புரத்திலேயேவசிக்
கும்போது, முன்புசீடர்காவலில்வைக்கப்பட்ட தமதுடம்புதகனமாவது தெரியாமல், சீ
டர்கள் வந்தணுகிக்குறிப்பானுணர்த்தி வற்புறுத்தினபின் சிலஅவயங்களெரிந்து குறைந்
தசமயத்தில்தெரிந்து, (தமக்குக்காமகலாபோத காசிரியர்களாகிய அரசபத்தினிகளுக்கு
நம்பிக்கைத்துரோகம்செய்து) உடனே அரசனுடலைவிட்டுநீங்கித்தகனமாகின்ற தமதுட
லிற்பிரவேசித்து, விஷ்ணுவைவழிப்பட்டு எரிகின்ற தீயைத்தணிப்பித்தும் மேலெழமா
ட்டாமல், நரசிங்கோபாசனைசெய்து, அதுவந்து கைப்பற்றித் தூக்கிவிட்டபின் எழுந்து
நரசிம்மகராவலம்பம் என்றொருநூல்செய்து துதித்துயர்ந்தாரென்றும், பின்புவந்து காம
நூல்வாதஞ்செய்து வென்றாரென்றுங் கூறுகின்றார். இதனாலிவர்சரஸ்வதியைத்தவணை
கேட்டுச்சென்று சந்நியாசவிரதபங்கமுற்றுவந்து வென்றவைபவம் விளக்கமாகின்றதன்
றோ? தனக்கு மூக்குப்போனாலும் போகட்டும் எதிரிக்குச் சகுனத்தடையானால் நல்லது
என்பதுபோலச், சந்நியாச பங்கமானாலென்ன எது எப்படிப்போனாலென்ன, யாரையும்
வென்றோமென்ற பேரேவேண்டியதென்றுறைத்தெழுகின்ற ஏழுச்சியுள்ள இவர் எல்
லாமித்தைபிரமமே நித்தியம் நானே அப்பிரமமென்றுகூறுதல் என்னபொருத்தமோ வி
வேகிகளுணர்வாராக விரிப்பானேன்.

பரமசிவன், தாருகவனத்துக்கு அதிசுந்தரபிக்ஷாடன ரூபராகச்செல்லுங்கால், விஷ்
ணுவாகிய மோகினி பாலிச்சையுற்றனராம். அதனால்காமாரியென்னும் பெயருக்குப்பங்

கம் வந்துகிட்டதாம். அப்பங்கத்தை அவரே சங்கரராய் வந்து சந்நியாசியாயிருந்து மாற்றினராம். நீக்கமில்லாத சிவத்துரோகத்துக்கு ஆளாகிஎங்குமில்லாத இப்பெரும்பாதகங்கூறிய சரிதருக்கு, வேடமாறி வஞ்சித்து ராஜபத்திநிகள் நூற்றுவரைப்புணர்ந்து காமுகராயிருந்தசங்கரர் காமாரியென்ற பேருக்கு வந்தபங்கத்தை மாற்றினரென்று பொய்கூறுவது சிறிதும் பொருந்ாதேயென்று சிறுவரும் விளங்கிக்கொள்ளக்கூடிய தெளிவுமில்லாமற் போனதென்னையோ! காமாரி என்றபேருக்குப் பங்கம்வரின், அப்பெரும்பெயர்கூறிய சுருதி யெல்லாம் புராணேதிகாசாதி நூலெல்லாம் அபத்த நூல்களென்றாகி, பரமசிவன் காமாதுரனென்றாகி, அவனது சர்வஞ்ஞதாதி நித்தியமங்கள திவ்வியகுணங்களுமின்றாகி, அவன் ஆன்மாவுக்கருளும் பேறுகளுமின்றாகி இன்னும் எல்லா அனர்த்தங்களும் விளையுமே என்று சிறிதும்யோசியாது, அவனுக்கு எக்காலத்துமில்லாத காமாதுரத்தன்மையை இச்சரிதர் கூறவந்தது, தமதுசங்கரருக்குமேன்மை கூறக்கருதியேயன்றிவேறில்லை. அதிலாசையுற்ற இவர், சங்கரர், வஞ்சித்து நூறுபெண்களைப் புணர்ந்து காமாதுரராயிருந்ததையாதாய் நினைத்தனரோ! ஆனால்வேறுடம்புகொண்டுதானே புணர்ந்தார் அதனால் சந்நியாச விரதபங்கமில்லையே என்பர்போலும். மிகஅழகு. காமநூல்விவரம் பெண்களைப் புணர்ந்துதான்தெரியவேண்டுமோ? சுத்தாத்துவிதசைவசித்தாந்த சிகாமணியாகியகுமாரகுருபரசுவாமிகள், பிறர்வேண்டுகோளுக்காகக் காமநூற் பிரசங்கம் அந்நூலுணர்ச்சியாலேயே செய்து, அதில் சந்தேகித்தவர்களுக்கு, மலம் புளிப்பென்பது வைத்தியநூலுணர்ச்சியாலன்றி யாராவது உண்டு அனுபவத்தால் தெரிந்து சொல்வதல்லவே என்று விளக்கியதை இச்சரிதர்கேட்டு மறிந்திலர்போலும். தமது சந்நியாசவிரதபங்கம் வாராமற் காமநூலுணர்ச்சிகொண்டே வாதித்துவெல்லும்வழியிருக்க அதைவிட்டு மாதர்பாழ்ங்குழியே வழியாக வுணர்ந்தசங்கரர், பரமசிவ காமாரிநாம பங்கத்தை மாற்றினரென்றுகூற இவர் மனந்துணிந்ததை என்னென்று கூறுவது. நிற்க.

இனிப், பரமசிவன் மோகினியாலிச்சையுற்றரென்ற பெரும்பாதகப்பெரும் பொய்யைவிட்டு உண்மைநோக்குவார்பின்வருங்கந்தபுராணசரித்திரத்தைநோக்குக. சிவனது அதிசுந்தர ரூபங்கண்டளவே, விஷ்ணு, தான் புருடோத்தம னென்பதையுமறந்து, மோகினி ரூபங்கொண்ட அம்மட்டிலேயே அச்சுந்தரரூபத்தில் அதிகமோகமுற்று என்னைத் தழுவி என்னிச்சையை மாற்றவேண்டுமென்று பிரார்த்திப்ப, அதுகேட்ட பரமசிவன், உன்னுடைய பிராகிருதரூபத்தால் நமது மாயநீத சுத்தரூபமாகிய இதனைத்தழுவமுடியாது. தழுவினுஞ்சாம்பராகிவிடும். ஆதலால்உன்னிச்சைப்படி உன்னுருவுக்கிசைந்த வேறுருவங்கொண்டு பிற்காலத்தில் உன்னைத்தழுவி உன்னிச்சையை முடிப்போம். இப்போது குறிப்பிட்ட காரியத்தைச்செய்யென்று ஆஞ்ஞாபித்தனரென்பதே யுண்மையென்க. சந்தேகமற அக்கந்த புராணத்தில் எப்பொழுதுங்காணலாம்.

இனிச், சங்கரர் சாக்தமத கண்டனஞ்செய்யத் தொடங்கி, அச்சக்தியின் கோபத்தாலிடர்பட்டுச்சௌந்தரியலகரி நூலாற்றுதித்துய்ந்தாரென்றுகூறியசரிதர், அச்சங்கரர் நீல

கண்ட சிவாசாரியரை அடுத்தவமதிப்புற்று அவரைக்கொல்லும்படி நரசிங்கத்தை யேவ, அது அங்குச்சென்று ஆற்றலின்றித்தம்மீது திரும்பியதுகண்டு மிகவருந்திச் சிவாசாரியரை யடைந்து வணங்கிப்புன்மையுணர்ந்து அகம்பிரமக்கோண் முற்றுங்கைவிட்டுச் சிவதீக்ஷாதிபெற்றுச்சித்தாந்தசைவராய்ச், சிவானந்தலகரி சிவபுஜங்கம் தேவிபுஜங்கமுதலிய நூல்களைச்சைவபரமாகவே செய்தியற்றாரென்பதுங் கூறிலர். இது அவமதிப்பென்று நினைத்தார் போலும். இதுவே முந்தினவைக்கெல்லாம் பிராயச்சித்தமாக நின்றுய்வித்த மகிமைத்தென்றுணராமல் இவர் மறைத்துவைத்தாலும் அந்நூல்கள் லோகப்பிரசித்தியாய்நின்றுண்மை விளக்குகின்றன. சங்கரர் நீலகண்ட சிவாசாரியரை யடைந்து சைவரான மகிமை நீலகண்டவிஜயத்திற் கூறப்பெற்றது. இதனைக்காட்டாலூர்ச் சுந்தரசிவாசாரியரும் சிவாதிக்கரத்னவளியிற் கூறியுள்ளார்.

ஆனைக்கும் அடிசறுக்குமென்றபடி, விரிந்துகிடந்த வேதங்களை நன்குணர்ந்து வகுத்துப் புராணங்களையு முறைப்படுத்தோதிய வியாசமுனிவரும் ஒருசமயந்தாமசகுணவயத்தராய், விசுவநாதசந்நிதியில் நாராயணனே பதியென்று பொய்புகன்று கைதம்பிக்கப்பட்டு அந்நாராயணர் வேண்டுகோளாலது நீங்கியுய்ந்தார். அதனால் அவருலகராலிழிக்கப்பட்டிலர். அதுபோல இச்சங்கரரும், ஆதியில், "உலகத்தாருண்டென்பதில் லென்பான் வையத், தலகையாய் வைக்கப்படும்." என்ற தேவர்சுருதியின்படி வேதசிவாகமாதி சிவசாஸ்திர முற்றுணர்ந்த பெரியோர்கள் பதியுண்டு பசுவுண்டு பாசமுண்டென்று கூறுகின்றமுடிந்த முடிவாகிய சைவசித்தாந்த சத்காரியவாத விரோதமாய்ச், சீவனில்லை செகத்தில்லை ஈசுரனில்லை, பிரமமொன்றேயுள்ளது. நானே அப்பிரமமென்னும் அகம்பிரமங்கூறிக், "காதலினா னான்பிரமமென்னுஞானம் கருதிபசுஞானம்" என்ற சித்தாந்தசுருதிப்படி அகம்பிரமஞானமேற்கொண்டிருந்தாலும்தவப்பயனாற்றிருவருள் கைகூடப்பெற்றுச், சந்திரமௌளீசபூஜாதிசிவ நியமசித்தாந்த சிவஞானியாய்விளங்குதலால், இவர் முன்கொண்ட அகம்பிரமநிலை நோக்கி உதாசீனஞ்செய்யப் பெறாரென்க. சரித்திரகாரர்கள், சங்கரரை உயர்த்தக்கருதிப் பாதகங்களுக்கிடமாக கூறியவைகளன்றி, அவருக்குள்ளபடி கூறுமேன்மைகளில் யாருக்கும்விரோதமில்லை. குருபக்திவிசேடத்தால் குருவையுயர்த்திக் கூறுதல் எம்மதத் தருக்குஞ்சம்மதமே. விநாயக சுப்பிரமணியாதியரும் வந்து தொண்டு செய்கின்றார்களென்று யார்தாங்கூறுவார்கள். சங்கரர் சிவாம்சமாதலால் விநாயகாதியர் வந்துதொண்டு செய்தாரென்பது விரோதமின்றெனில், அது அவர்க்குந் துணிவில்லை. தக்கபிரமாணமுமில்லை. மதிமறந்து கூறினும் விநாயகாதியரின் அம்சங்களே தொண்டரென்றாவது சொல்லித் தொலைக்காமல் சாக்ஷாத்விநாயகாதியென்றதென்னையோ? அன்றியும் சிவகலையே சங்கரராய்வந்ததென்றமுழுப்பொய்யையேஎங்குநிறுத்தப் பயந்து, சிவன்பிறந்திலன்மாயையே சங்கரராய்ப்பிறந்ததென்று கூறுதலை நோக்குவார்க்குச் சங்கரர் கர்மானுகுணமாகப் பிறந்துதிருவருளாற் பரிபாக மடைந்தவரென்னு முண்மை வெளியாகுமென்க.

நன்மையென்று சரித்திரங்கூறப்புகுந்து சிவத்துரோகத்துக்கிடமானவைகள் கூறின சரிதர், அச்சங்கரர் கோபத்துக்கே யிலக்காவரன்றி வேறில்லை. இன்னுமிவர் கூறும் பூர்வாபர விரோதம் பொருந்தாமைகள் பலவற்றையும் ஸ்தாலிபுலாகத்தாற் காண்க. இவைகளைப் பிறர் மெய்யெனக்கொண்டு மயங்காதன்மை யுணரும்பொருட்டே திருவருளைவேண்டிநின்று இவர் சரித்திரத்தையுஞ் சுருக்கிக்காட்டி இந்நூல்செய்யப்பெற்றது.

நல்லது, சங்கரபாஷியம் பிரமம் ஒன்றொழிய மற்றெல்லாமித்தை யென்பது, உபநிடத வாய்மையாகவும் அதனைப்புறக்கணிப்பதென்னெனிற் கூறுதும்; விரோதயுத்தியின்றி ஒருபக்கங்கோடாமலுய்த்துணர்க. "பற்றுகபற்றற்றான் பற்றினையப்பற்றைப், பற்றுக பற்றுவிடற்கு" என்றதிவ்வியசுருதி சிரமேற்கொண்டு பிரபஞ்சப்பற்றை நீக்காதிருக்கப்பற்றிய சிலர்கள், அப்பற்று முற்றும்விட்டொழிய வேண்டுமானால், அவை யெல்லாமித்தையே யென்று அதற்குறிய உதாரணங்கள் பொருந்தக்கூறினாலன்றி அப்பற்று விட்டொழியாவென்னுங் கருத்தால் அவ்வுபநிடதங்கள் கூறினவன்றி வேறில்லை. அதனைப், பதிபசுபாச நித்தியங் கூறுகின்றசுவேதாச்வதர் முதலிய எத்தனையோ பிரபலோபநிடதங்களாற் றெளிக. மித்தை கூறும் உபநிடததாற்பரிய நோக்காமற் கொடிறும்பேதையுங்கொண்டது விடாவென்றபடிமித்தியாவாதமே பற்றிநிற்பார், நித்தியங்கூறு முபநிடதங்களினுண்மைப் பொருட்கு என்னதாற்பரியங் கூறுவர். சுருதிகளெல்லாம், தியேயனுந்தியாதாவு முள்பொருள்களென்றே கூறுகின்றன. மற்றெல்லாமித்தையென்பவர்களும் அது வாசாமாத்திரமாயொழியத்தியேயனொருவனைத் தியானித்து வழிபடுகின்றவர்களாகவே யிருக்கின்றார்கள். இதனை, அவர்கள் நாடோறுநியமமாகச் செய்துவருகின்ற ஸ்நாநாநுஷ்டான செபதவதியான பூஜாதிகளே தெளிய விளக்கும். இனி அவை யெல்லாம் சற்காரியவாதபக்கமாய் நின்றுண்மையெனக்கருதிப்பலனைவிரும்பிச் செய்யவில்லையென்றால், அப்பூஜாதிகள் உலகரைமருட்டி வஞ்சித்துப் பொருள்கவரச் செய்யும் பொய்வேடமே யென்றாகி யிங்குமிழிவுதந்து அங்கும் நிரயஏதுவாய்முடியுமேயன்றிவேறில்லை யென்க. இனி, இவர்களுந் தங்களுக்கு ஏதேனும் ஆபத்து வந்தபொழுது மற்றெல்லா மித்தையென்றிறுகப் பற்றியதடியோடொழிந்து இறைவனுண்டு நாமடிமை யென்றுபற்றிப்பிரார்த்தனைகள் செய்து அவை பலன் கொடுத்துய்விக்குமுண்மையுமவர்களே அறிவார்கள்; அறிந்தும் ஆபத்து நீங்கியபின் முன்னைமித்தியாவாதமேற் கொண்டுவாய்மதம்பேசுவார்கள். இப்படியே இவர்களது ஒரு வழிப்படா நிலைமையுலகெலா முணரும். விரிப்பானேன். அமைக.

இச்சங்கராசாரியர்செய்யப்பெற்றுள்ளசிவபுஜங்கசுலோகம் (சஉ)ம் தேவிபுஜங்கசுலோகம் (உஅ)ம் ஆக (எ0) சுலோகங்களின் வாக்கியதாற்பரியங்களைவரிசையாக (எ0) கவிகளில் அமைத்து மேலும் (கஅ) கவிகள்சேர்த்துச் செய்யப்பெற்ற, வேதவனேசஸ்தவமென்னும் நூலும் இச்சோமசுந்தரமாலையுடன் சேர்க்கப்பெற்றுள்ளது.

---



உ

ஓம் கணபதயேநம:

# சோமசுந்தரமாலை.

## சித்திவிநாயகர்.

திருவரு ளுருவாம் வல்லபை வாமஞ் சித்திபுத் திகளிரு பாங்கின்
மருவுறப் பிரண வப்பொரு டானே வாய்மையென் பதனைநேர் வயக்கு
முருவுகொண் டிறைஞ்சு முலகெலாம் வேட்ட வொருங்குசித் திக்குமா வுடனே
தருவதோர்* மதுரைச் சித்திவே ழத்தின் றுடலைச் சூடலைச் சார்வாம்.

## நூல்.

சிவனருள் வேதச் செம்பொருள் சிவனே தெளித்தருள் சிவாகமத் தோர்க
திணிமலப் பிணியர் மயக்குறா விலக்கென் றிடனெறீஇக் கேவலாத் துவித
வவலபா டியஞ்செய் சங்கரர் சிவதீக் காதிபெற் றிந்துசே கரபூ
சாதியா லனைய வழுவறச் சுத்தாத் துவிதநன் னெறியடுத் தன்பாற்
சவியுருக் கலையர் சிரமணி கலையர் தந்தபோ பலத்தரன் பருக்குத்
தகுபலப் பிரதர் சிவநனி புவனந் தருபவர் சிந்தித்தாங் குதிப்போர்
சுவைசெயா னந்த மயர் சிவாம் புயப்பூந் துணையடிக் காகவென் னமவென்
றுதிக்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசேகரனே. (க)

சுருதியா கமமு னெவற்றினுங் கருத்துத் துதிதரு பதிபசு பாசந்
தொன்மைநித் தியமென் றுணிபிலங் கிடவுந் துரிசுற மித்தையென் றொதுக்கித்
தருபரம் பிரம நாமென்பா டியஞ்செய் சங்கரர் நன்னெறி சார்ந்து
சம்புநின் சரித நதிநின்றும் பெருகித் ததைபவத் துகளடக் குவதாய்க்
கருதுபுத் திகளாங் கால்களி னேடுங் கதியதாய்ப் பவஞ்சச்சு ழலினுங்
கழிமிகு தாப நீக்குவ தாயென் கடிமன மடுவினிற் பதுவாய்த்
துரிசிரித் தருளுஞ் சிவானந்த லகரி துலங்குக நனிபெருவற் றினுமென்
றுதிக்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (உ)

---

* ஓர் சித்தியெனவிளையும், அது வினைத்தொகை.

தக்கனு லெவைக்குந் தலைமையாம் வேதந் தவஞ்செய்வா னதன்பயன் றருவான்
சாற்றவு மொன்றே பொருள்பிறி திலையத் தனிமுத லுமெனு மயலோர்
கைக்கொள்பா டியஞ்செய் சங்கரர் நல்லூழ் கைவரத் தெளிந்துவே தத்தாற்
காண்பவன் மனசுக் கினியன்முப் புரமுங் கடிபவன் முதல்வன்முக் கண்ணன்
செக்கர்வே ணியன்பாப் பணியன்மான் கரன்மா தேவன்மிக் கொளிர்பவன் சிறியேன்
றிறத்தினுந் தயைகூர் பவன்பசு பதியே சிதாலம்பன் சாழ்பன்மா விடம்பன்
துக்கமுற் றொழிக்குஞ் சிவனையென் னுளத்திற் றுலங்கவுட் கொள்கின்றே னென்ற
துதிக்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே (௩)

நாம்பெரி யாரென் றுரைத்திடார் பெரியர் நவிற்றுநர் சிறியர்தன் பெல்லா
நாம்பெரி யாரென் றுரைத்திடார் பெரியர் நவிற்றுநர் சிறியர்தன் பெல்லா
நண்ணிடு மவர்பா லென்பதூ லெல்லா நாம்பிர மஞ்சொல்பா டியத்தைச்
சோம்பர்கொண் டுவப்ப வுரைத்தசங் கரர்பின் றாநெறி சைவமே யென்னத்
துணிந்துநின் றுலகிற் சுரரளப் பிலராய்த் துதைகுவர் சிறுபய னன்றி
யாம்பய னுதவு மாற்றலொன் றிலாமற் றவருபா சனையயப் பயனை
யயர்கன வினுநோக் கிலன்சிவ சம்போ வரிபிர மாதிய ரடுத்தந்
தோம்பிரிந் தெட்டா நின்னடிக் கமலத் தொழும்பையே யென்றும்வேண் டுவலென்
றுதிக்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௪)

பிரமநா மென்று பிரமன்மா னெடுமாட் பேதைமை யாறபெரி தமர்த்துப்
பிரமநா மென்று பிரமன்மா னெடுமாட் பேதைமை யாறபெரி தமர்த்துப்
பீழையுண் மூழ்கிப் பீடழிந் தொழிந்த பிரசித்தி யோர்க்குமப் பிரமஞ்
சரதநா மென்றே பாடியம் புகன்ற சங்கரர் பசுபதே தமியேன்
றருமநூன் ஞாயம் வியாகர ணுதி சகுனநூல் வைத்தியம் புராணம்
விரவுமந் திரநூ றுதிநட நகையிவ் விதத்திலொன் றினிலுஞ்சா துரிய
மேவிலன் யாணு ரதற்கென்பாற் காதல் வேந்தற்கெவ் வாறுண்டாம் வினையேன்
றுரிசுறு பசுவே யெனைத்திக ழருளாற் றுகளறப் புரந்தரு ளென்ற
துதிக்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசேகரனே. (௫)

தனுகர ணுதி களிலது வதுவாய்ச் சார்ந்தவை சடமென வொருவித்
தருமகம் பிரம மெனவெழு களிப்புட் டாழ்ந்துமே னேக்குர னற்றாழ்
வினையினவ் வளவி னிலைபசு ஞான மேலால் வேறில்பாடியமுன்
விளம்புசங் கரர்பின் கடங்கண்மண் ணணுக்கள் விளைபுகை யழல்வரை படநூ
லினையவை கோர யமபய மணுவு மிரிக்குமோ தருக்கத்தா லென்னே
யிடருற மிடறேய்ந் துலர்திநன் னெஞ்சே யின்பருள் சம்புசே வடியே
துனியற விரைந்து நனிநினை பரம சுகம்பெறு திற்றியென் றுரைத்த
துதிக்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௬)

சாதன நான்கென் றோதிமேற் கொள்ளுந் தவர்பய னுதியுண் டென்றே
சாற்றியும் விவகா ரத்தலாற் பாமார்த் தத்தெலா மித்தையென் றுரைத்த
வாதிசங் கரர்பின் பதிபசு பாச மனுதிநித் தியமெனும் வாயமை
யறிந்துமுன் பழுது நினைந்தமிக் கினைந்தென் னகந்திரு வடியினுத் துதியி
லோதுபூ சனையிற் காஞ்செவி சிவயே யொளிர்சரி தத்திலென் புத்தி
யுன்றியா னத்திற் கண்கணின் காட்சி யுறவினி லுறவினி தருள்க
சோதிநீ யருளி லேனை நூல் வழியிற் றேயுங்கொல் பாய்புல† னென்ற
துதிக்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௭)

உள்ளன வென்று மழிவுறா வின்மை யுதித்திடா வுண்மைநூற் றுணிபென்
றுய்த்துண ராது வியாவகா ரிகத்தி லுளபர மார்த்தத்தின் றென்ற*
தெள்ளுபு சிப்பி வெள்ளியா மணிப்போ லியைமணி யென்னவெண் மாநீ
ரின்பயங் கான றண்புன லென்றோர் விலர்மன மலைதல்போ லந்தோ
வள்ளன்மா தேவ பசுபதே யறிவு மான்றவ ரீசனு முன்னை
மறந்துநிற் கயலோர் தெய்வதப் பிராந்தி வயத்தராய்ச் சார்வரென் றெதுக்கித்
துள்ளுமான் கரத்த சங்கா ருனையே தொழுதுசற் காரியம் விளக்குந்
துதிக்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௮)

மன்றனிச் சயித்து மணமகட் கணியின் வகைமிகப் புனைந்துபல் சடங்கும்
வயக்கிமே லவளை மருவியின் பளிக்கு மணமகன் யாரெனி லவன்வே
றின்றெனல் போல்வே றிறைபிலை நானே யெனக்கொளு மாறுபா டியமு
னியம்புசங் கார்பின் மணம்புரி சீவர்க் கிறைசிவ னென்னவாழ் மடுவிற்
சென்றுவெங் கானின் மலையினின் மலர்க டேடுவ ருமாபதே தமது
திகழ்மனக் கமல நருமல ருன்பாற் சேர்த்தசை வறவிருந் தின்பந்
துன்றுற வறியா ரென்றிடை யறாத தூயபே ரன்பியல் விளக்குந்
துதிக்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௯)

பசியினல் வருந்து வோன்றண்டு லாதி பலதரீஇக் கொணர்வவ காரப்
பாற்பர மார்த்த முண்டலே யன்றே பகருமற் றதுபொய்யே லுய்வெங்
கிசையுமென் றாகித் தண்மைமே னேக்குள் ளீடிலாப் பாடிய முன்ன
ரியம்புசங் கார்பின் னரர்சுரர் வரைகா னியங்குவல் விலங்குபல் விகங்க
மசகமே பசக்கீ டாதிபல் பவங்கள் வரினுமென் னிதயநின் பாத
மலர்நினை விடைய றுப்பரா னந்த வாரிதோய்ந் தின்புறி லனைய
சுசியறு முடலால் வசையிலை யடியிற் றேய்மன மேயருள் கென்ற
துதிக்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௧௦)

†புலன்— ஈண்டு அறிவு. * என்றது எள்ளுபு எனப்பிரிக்குக.

மருவியின் பருளுந் தலைவரில் லாத மகளிரைக் கைம்மைக ளென்றே
வழங்குவ ரதுபோற் றமக்கொரு தலைவர் மற்றிலை நாம்பர மென்றே
பரிவுற வுரைத்துக் கைம்மையே யெனுமா பாடியம் புகன்றசங் கரர்பின்
பரிங்கொரு தலைவ னுண்டவன் சிவனே பசுக்கள்யா மெனத்துணீஇ நான்காச்
சிரமிக ளாக மற்றைய ராகத் திருந்தினு மென்பப னெவன்றன்
சிந்தைநின் வயமா மனையவன் பணையே சேர்கின்றா யவன்பவ பாரந்
துரிசறச் சுமத்தி பசுபதே சம்போ தூரியவென் றனைநனி துதித்தார்
துவக்கறு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௧௧)

பதிபசு பாச மாதிகா சிபர்முன் பகர்தலை விடுத்தகம் பிரமப்
பாழ்த்தலை வீழ்த்தப் பட்டசூ ரளவுட் படாப்பெரும் பாதகம் புரீஇப்பின்
விதிவழி குகனேர் துதித்தடைந் தாங்கு வேண்டுநர் சுமார்த்தசித் தாந்தம்
விளம்புபு நீல கண்டரா லதனை விலக்குசங் கரர்குகை வெளியிற்
றைவன மலைமேற் புனலன லாதி தங்கிநோற் கினும்பய னென்னே
சம்புநின் பதமே யாவனோர் நிலையாச் சந்ததஞ் சிந்தையிற் றழுவுந்
துதிசிவ யோகி யனையனே பரம சுத்தநித் தியசுகி யென்றார்
துவக்கறு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௧௨)

நாரத ராசி புகலநாம் பிரம நமக்கருள் பவரெவ ரென்றே
நவில்சன கன்பா லுணவெலா முண்டு நலிபசி யறுமையோர்த் தொருவற்
காருண வுதவாற் றலையிலா நீதா னுபரா நின்பிர மத்தி
லனவிடா யென்று கணேசர்காட் டிடவு மகம்பிர மஞ்சொல்சங் கரர்பின்
சாரமில் பவஞ்சத் தழன்றறி வொழிந்துன் சார்பிற்றா ரித்தவெற் புரத்த
றருமுனக் கெனினு மேழையின் றெனக்குன் றனிற்கதி யற்றறுந் தீன
தூரியர்ப் புரக்கும் போருளாண்மைச் சொலபர்மு வுலகுமின் றென்றார்
துவக்கறு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௧௩)

சனகனுன் பரமென் றழன்மயல் கணேசர் தவிர்த்துமெய் யுணர்த்தபின் ஞான
சனகனு யினவா றகம்பிர மக்கோட் சார்புதிக் காதியாற் றவிர்த்த
தனைநிகர் நீல கண்டராற் சைவத் தனிநெறிச் சார்ந்தசங் கரர்பின்
றகுதியில் லெளிய ரெவர்க்குநீ யுறவன் றமியனே னவரின்மிக் குயர்ந்தே
னனியருள் பிரபு பசுபதி நீயென் னவையெலாம் பொறுத்தருள் கடமை
நாதநிற் குரித்தே தொன்றுதொட் டுளதே நம்மிரு வருக்கும்பாந் தவியந்
தனுமுற வினர்த முறையுமின் னதுவே தொண்டனேற் கருள்கெனத் துதித்தார்
துவக்கறு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே (௧௪)

கொலையினுக கஞ்சிச் சிலையினை விடுத்துட் குலைந்தபார்த் தனுக்குநின் குலத்தோர்
குணமிது பழுதன் றென்றகம் பிரமங் கொளுத்திமால் கொல்வித்த கீதை
தலைமிசைக் கொண்மா பாடியம் புகன்ற சங்கரர் பசுபதே தமியேன்
றனைப்புரத் தலினிற் கார்வமுண் டேனின் றனைநினைக் கொளுதுமால் செய்து
நலிதலை யெழுத்தை மாற்றிலை யாற்ற னுண்ணிலை கொன்னகத் தெவரு
நசிக்கொளு வேதன் றலைநக நதியா னசித்தனை முயற்சியின் றெளிதிற் [பின்
றொலைவிலென் றலையி னெழுத்தினைத் துடைத்துத் துய்தருள் கென்றுவேண் டினர்
றுவக்கறு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௧௫)

தசரதன் செய்பூ தரம்வகித் தரசாங் தகைபெரும் பகைநலக் கென்று
தணத்துநற் குணத்தைச் சார்ந்தசா வியதோர் தந்தையால் வசிட்டரவ் வரசி
லசைவற நிறுத்தற் குரைத்தவா சிட்ட மதிமடங் தருமறி யார்க்கென
றறைதலுய்த் துணரார் களிப்பநாம் பரமென் றவலநூல் புகன்றசங் கரர்பின்
றிசைமுக னுயு ணீடிவாழ் குசவென் சென்னிமிக் கேழைமை பொறித்த
திறத்தினு னினது கடைக்கணேக் கதுவே தீனரைத் தரீஇப்புரத் தலினுற்
சுசியிலென் பரம தைனிய நீக்குந் துனைந்தெனத் துதித்தனர் தூய
துவக்கறு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௧௬)

வாசிட்ட மாதி யகம்பிர மக்கோண் மனத்தர்க்கே கான்மவா தப்பாழ்
மயலுற மடமை தரினுஞ்சித் தாந்த மாண்பினர்க் குயர்சிவா கமமே
யாசற்ற நூலென் றுணர்த்துமிக் கருத்தின் விருத்தமா யகம்பிர மஞ்சொ
லாதிசங் கரனென் முற்றவப் பயனே வையநின் கருணையி னானே
மாசற்ற விபுதீ பிரசன்ன னாகி வரினுநின் மலர்ப்பதம் வணங்கும்
வானவர் முடிகண் மறைத்திடி னுயேன் வயங்குறக் காண்பதெங் கென்று
தூசிட்ட கரித்தோற் புயநினைத் துதித்த தூய்மையோர் சிலர்சிலர் சூரிசர்
துவக்கறு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௧௭)

நாம்பர மெனப்பா டியமுல கிருள்சார் நவையுறப் புகன்றமா சறவென்
னுதநீ யொருவ னேபர முத்தி நல்குவோன் மான்முனோ ருன்னு
லாம்பத விகள்பெற் றிறைஞ்சுவர் மேலு மையநின் றயைக்கள வின்றென்
னுர்வமு மனைத்தெற் புரத்தற்குன் னருளேக் கலமது கிடைத்தலென் றென்றே
தேம்புசங் கரர்நின் னொருகலை யென்றுந் திங்கள்பத் தொருத்திதன் வயிற்றிற்
சென்றிருந் தவனித் தலைகிழக் காகச் செனித்தனை யென்றுஞ்சொற் றந்தோ
தோம்புகா நுதற்கண் மணிமிட றுதி தோற்றமு மேற்றமுஞ் சொல்வார்
துவக்கறு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௧௮)

விரவிய துராசை நிறைந்து துர்வேந்தர் வெற்றில்வாய்ச் சேர்த்தல வின்றி
விளைபவ நிலையாய்த் துக்கமே தோற்றி விரிபவஞ் சத்தில்யான் படுதுன்
பொருவிய வருளி னயற்குமீ துதவி யுதுதிரு வுளங்கொளி னெளியே
னுய்ந்தன னென்று வேண்டுசெங் கரரை யுன்கலை யுருவென லொன்றே
திரிநய னங்கள் களக்கறை கங்கை திங்கள்சூ லந்தம ருகமுற்
றிருவடை யாளக் குறிப்புமுண் டென்று சிவசிவ பேரண்டப் புரட்டாய்த்
துரிசுற மருட்டிச் சங்கர சரிதஞ் சொற்றனர் சுமார்த்தரென் பாவந்
துவக்கறு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௧௯)

சந்தத மோகா டவியுழன் றெழின்மா தரின்முலை யோங்கலி னடித்துத்
தாரபுத் திரமாற் றருவுலா யாண்டுஞ் சடிதிதன் விருப்பினிற் சரித்து
நந்துசஞ் சலஞ்சா ரென்மனக் குரங்கை நவையில்பத் திமைக்கயிற் றூர்த்தென்
னுதகா பாலீ கொண்டருள் கென்று நமந்தசங் கார்பட்ட பாதர்க்
குந்,ருள் புரிந்தா ரென்றுமப் பாத ரொண்குக னேயவ தரித்த
வுத்தம ரென்றுஞ் சங்கர சரிதத் திட்புகுத் துரைத்தன ருன்சேய்
சுந்தர குகன்சங் கார்ப்பணிந் தருள்சார் துவக்கென்பா தகமிது தொலைமோ
துவக்கறு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௨௰)

பிறர்சுரர் போனி கருப்பையுற் றுழலாப் பெருமைமுன் னூலெலாம் பேசும்
பெற்றியுய்த் துணரார் கருக்குழிக் கிடந்து பிறந்தனை சங்கர ராயென்
றறைவர்கோ விந்த ராதியர் பலர்பா லடுத்தருள் பெற்றன ரென்ப
ரவற்றின்முன் பின்மா றுணர்தராச் சரித ரனையசங் காரகம் பிரமச்
சிறையிட ரொருவித் தைரியத் தூணிற் றிடகுண யாப்புறீ இச் செல்வி
சித்திராம் புயநன் னெறியவென் மனமாந் திகழ்பட மனைச்சிவை யுடனு
டொறுமிரு ளறவீற் றிருந்தருள் கென்று துதித்துமேற் கதித்ததோர் கிலர்கொல்
சுடர்க்கொடி கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்தரசே கரனே. (௨௧)

ஐயநீ யேசங் கரரெனப் பகர்ந்துன் னடிதொழு மமரர்மா தவர்ச்சார்ந்
தடியில்வீழ்ந் தருள்பெற் றனையென நாக்கூ சாதுசொல் பாதகர்க் கந்தோ
வுய்வுமுண் டேகொ லனையசங் காரிவ் வுலகின்முன் வினைவழி யுதித்தா
கூழினன் னெறிசார்ந் தென்மனக் கள்வ னுறுபொருள் கவர்பரா தினக்
கையனுய்த் தனிக ரிற்புகு முயற்சிக் கருத்தனுய்ப் பலபடச் சூழுங்
கரிசின னிவனை யெங்ஙனஞ் சகிப்பேன் கழறுசோ ரர்க்கெலாம் பதிநீ
துய்யநின் வயத்த னுகவே கொண்டு தொண்டனேற் கருள்கெனத் துதித்தார்
சுடர்க்கொடி கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௨௨)

அட்டசித் திகளை மறந்தும்வேண் டிலர்மெய் யன்பரென் றிழித்தறு வருக்காண்
டளித்தநீ யேசங் கரரென்பர் கும்ப ரடியில்வீழ்ந் தவைமுத லாய
மட்டிலா ணவமே வளர்க்கும்பலை ரெழில்கள் வாய்த்தன ரவரென்பர் சரிதர்
மாசறு நீல கண்டர்பா லுய்த்த மானுட ப்டங்கல்போய் மடங்கிக்
கிட்டிமோ றுறத்தீக் காதிபெற் றுயர்ந்த கிளக்கில ரனையசங் கரர்நின்
கிளர்பதார்ச் சனைக்குப் பேரின்பே யருள்க கிடைப்பிக்கி னரிவிதி பதம்யான்
றுட்டவல் விலங்காய்ப் பறவையாய்ப் புவிவான் றுருவுதுன் பாற்றிலே னென்றார்
சுடர்க்கொடி கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (உ௩)

சித்திக டமையோர் பொருளெனக் கனவுஞ் சிந்தியா ரெந்தைநின் னடியார்
சென்றவர்க் கேவல் புறங்கடை காத்துச் செயுமென நூலெலாஞ் செப்பும்
பொத்துமா ணவமே லெழீஇடம் புரியிப் புன்றெழி லாற்பய னென்னே
புனிதவத் துவிதா னந்தவாழ் வருண்மோ புரையிதென் றெறுக்குசங் கரர்பின்
பத்தியாற சாம்ப கைலையிற் றிருமுன் பணிந்துநின் றஞ்சலித் தயன்கற்
பம்பல கோடி யொருகண மாகாப் பண்புணர்ந் தொழிப்பதென் றென்றுன்
றுத்தியம் புரிந்து சித்திவீ ணகந்தைத் துணையென றுலக்கினர் தூய
சுடர்க்கொடி கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (உ௪)

உலகினை மருட்டி வசித்துப்பல் பொருளீட் டுறுதுணை யகந்தைநா டொறுமீட்
டுடன்றுணை யன்றிச் சித்திபே ரின்பக் குறுதுணை யன்றென லொன்றே
நிலைபெறு யோகு நானெனும் போத நீட்டமென் றகத்தியர் பாற்கொ
ணிகழட ராச யோகமுன் னுவ நீத்தசங் கரர்பிர மாதி
பலர்துதி நிறையச் சயசய முனிவர் பரவுறப் பிரமத கணங்கள்
பாடியா டிடவெள் விடையிலெ மன்னை பாங்குற வெழுந்தருண் மேனி
சொலபமாக் காணப் பெறுவதென் றெந்தாய் தொழும்பனேற் கருளெனத் துதித்தார்
சுடர்க்கொடி கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (உ௫)

சித்திக ளடயோ காதியா ணவப்பேய்த் திடபந்த மேயெனல் விளங்கத்
திசையெலாம் வாத நசைமிக முளைந்து சென்றவண் வென்றியே மன்ற
நத்தியே னையர்வெற் றியில்வெறுப் புற்று நயந்துதம் பெருமையே தோன்ற
நவிற்றுசங் கரர்பி னுமாபதே கிரிச நாதநின் பாதநற் றுணையே
கைத்துணைப் பற்றி யென்சிர னெஞ்சிற் கண்களி லொற்றியக் கமல
கந்தமே மணந்து மாலய னுறி களுக்குமெட் டாதசித் தாந்த
சுத்தவின் படையப் பெறுவதென் றென்று துதிக்குமா றருளிய தூய
சுடர்க்கொடி கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (உ௬)

சிதம்பர ரகசி யம்முத லாமந் திரசித்தி யோகமுன் மலயச்
செல்வரிற் சிவதத் துவரூப மணியர் சிவமகி மாததீ சியின்பால்
விதம்படு தேவ கருமங்கோ தமர்பால் வேண்டிப்பெற் றனரெனப் பொருந்த
விளம்பினர் சிவனே சங்கர ராகில் விருத்தமிங் குரைத்ததென் றிடக்கற்
பிதஞ்செய்தார் சரிதர் சங்கரர் பொன்வில் பெருந்தன பதிதரு தேனு
பிறழ்மணி சசிநீர் முழுச்சுப மலர்க்கை யணிமையில் சிரம்பதம் பிறங்குஞ்
சுதந்தர நின்பா லில்லதொன் றஃதென் றொருடர் மனங் கொள்கெனத் துதித்தார்
சுடர்க்கொடி கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே (௨௭)

சிவகலை யேபாழ்ங் கருக்குழிக் கிடந்து செனித்ததென் றுரைத்தவிச் சரிதர்
சிவன்பிறந் திலனெஞ் ஞான்றுமெங் கணுமென் றெளிவுஞ்சொற் றனர்விளை யாட்டாற்
பவமிகு மாயை சங்கர ருருவாய்ப் பவித்ததே மெய்யென்றார் சிவனுற்
பத்திசொல் வதிலாங் கவருமச் சுருமிப் பான்மையால் வாய்மையா ரறியார்
தவநெறி சார்சங் கரருன்பூ சனைசா ரூபநற் றுதிகள்சா மீபந்
தக்கமெய் யன்பர் சார்புசா லோகந் தியானஞ்சா யுச்சியந் தானுந்
துவரிதழ்ப் பவானி நாதவிவ் வாறே தொண்டனேற் கருள்கெனத் துதித்தார்
சுடர்க்கொடி கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௨௮)

சங்கரர்க் குயர்வே யெங்கணும் புகலா சைவயப் பட்டுநின் றேருதஞ்
சரிதர்நெஞ் சொளித்தும் வாக்கொளி யாமற் சாற்றியு மாற்றமான் மூழ்கி
யங்கவர் பொருவற் புதந்துரீஇப் பலசேர்த் தறைவரென் பயன்கொன்மெய் யறிவார்க்
கவர்புகல் பரமார்த் தத்தினிற் பொய்யே யாகுமச் சங்கரர் சம்போ
வெங்கணு நிறைந்தோய் நின்னையே பூசித் திடையறுத் தியானஞ்செய் தென்று
மிறைஞ்சிவேண் டெனக்குச் சுரர்சிரம் பிரார்த்தித் தெய்தொணு நின்னருணோக்கத்
துங்கமா தீக்ஷை புரிந்துபே ரின்பத் தூமொழி யருள்கெனத் துதித்தார்
சுடர்க்கொடி கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௨௯)

நாரணன் முதலோர் சேவிப்பப் போந்த நயஞ்சொலி விண்டுதத் துவம்பின்
நாரதர் தத்தாத் திரேயர்பா லுணர்ந்தந் நாரணு தியர்ப்பணீஇ வாங்கொள்
சீருரை சரிதர் பொய்மைபே தையருந் தெளிவரச் சங்கரர் நினக்குத்
திருவுடை யாதி யணியகற் போதாற் றிருவடி யருச்சிப்பச் சுகந்த
மாரருண் மேனிச் சாத்தவன் றுதி யளிப்பவொண் பாசனந் தருதற்
கையபா லேந்து சூடசங் கரகிர் பாகர பசுபதே யெனக்குச்
சூரன்*மால் கந்த வகனரி பிரமத் துவமின்றென் செய்கெனத் துதித்தார்
சுடர்க்கொடி கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே (௩௦)

* சூரன்-சூரியன். ஆயிரங்கரமுள்ளவன் என்னுங் குறிப்பு.

என்னெனப் புகல்வே னிளைக்கினுஞ் சுடுமா றீசநீ மாரியே யென்னு
மிதபிர சித்த மாகவு மான்மோ கினியினுற் காமவா தனைமுன்
மன்னுபே ரொழியச் சங்கா ராயிம் மகியுறீஇத் துறந்துகாட் டினதா
வழங்கின ராசன் மனையைவஞ் சித்து மரீஇயதோர் கிலர்கொலோ சரித
ரன்னசங் கார்நின் வயின்புறத் துயிர்க ளனைத்துமோம் புறகினைந் தமர
ரலைவுதீர் மருந்திற் களத்தில்வெவ் விடம்வை த்தகம்புறத் துருதவ ணிறுத்த
துன்னரு ளொன்றே போதுநின் றலைமை துலக்கவோர் கிலர்பிற ரென்ருர்
சொலற்கருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௩௧)

கலையெனத் தொடங்கி மாயையென் றிலக்கிக் கள்ளுண்டா ரெனச்சிவ னேசங்
கரரென மனுட யோனிச ராய்ச்சார் காலவர்ச் சேவிப்பான் கணேசத்
தலைவனங் குகனந் தீசன்வீ ரன்மால் சதுமுகன் முதற்சு ரெவருஞ்
சார்ந்தனர் முனிவர் பனவரா யெனவச் சரிதஞ்சொல் பதகர்க்காழ் நரக
நிலையலா லுண்டோ சங்கா ரமரர் நிலைகுலை கொடுவிட நினக்கு
நீன்மணிப் பூணே குளிகையோ நாவ ணிமிர்சுவைக் கனியதோ கரத்திற்
றொலைவற வாங்கி வாயிட்டுக் களத்திற் றுலங்கவைத் தனையெனத் துதித்தார்
சொலற்கருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௩௨)

தாருக வனஞ்செல் கானின்மா யாதீ தத்திரு வுருக்கண்டு புருடோத்
தமனெனு மால்பெண் ணுருக்கொளத் திணைக்கே சகிக்கொணு மால்கொடு தழுவற்
கோருணர் வின்றிப் பன்முறை வேண்ட வுன்பிரா கிருதமெய்ப் நமைச்சார்
வுறினசித் திடுநின் னுருவினுக் கேற்ற வுருக்கொடு தழுவுதும் பின்னென்
றூரருள் புரிநீ மோகினி பான்மா லாயினை யென்பரொன் படுவா
ரையசங் கார்நின் னதிநதி பூசை யாதியி னென்றுபோ தியதே
சோர்வில்வீ டிவற்றன் றுருதழி சுராற் றுப்பய னின்றெனத் துதித்தார்
சொலற்கருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௩௩)

சங்கரர் பிரம நானெனு மகந்தைச் சார்பினின் றனர்முன ரெனற்குச்
சான்றவே றென்கொல் கோவிந்த குரவன் றனைப்பணிந் தெதிர்நிற்ப நீயா
ரிங்குரை யெனநான் பிரமமென் றுரைத்த வெழுச்சியே விளக்குமா லிவர்பி
னிறைஞ்சுபு நீல கண்டரைப் பசுநா னியற்பதி சிவனென்றோர்ந் தமைந்தே
யங்கா முடிவி லாற்றனின் பாற்றே யளவில தருபிறர் சுரர்க்கின்
றவரெலா மழியும் பிரளயந் தோறு மசலனு யேகனு யமர்தி
துங்கனே சாம்ப பசுபதே யெனநிற் றுதிக்குமா றருள்புரி தூய
சொலற்கருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௩௪)

குரவர்சொற் படிநீ வியாசர்பா லுணர்ந்து கூறுபா டியமெனப் பரம
குருவிசு வேசன் கூறியாங் கவர்பாற் கொளச்சென்று கண்டிடா தெதிர்சார்
நரநரா யணர்தாஞ் சுத்தசை வத்தி னலனுறு தரனரி பேத
நண்ணுறாப் பஞ்சா யதனபூ சாதி நலனுறப் புகல்கென வவ்வா
றரில்கொள்பா டியஞ்சொல் சங்கரர் சாம்ப வனைத்துநீ வகித்திசர் வஞ்ஞ
னகம்புறம் வியாபி தாயகன் யாவு மளிப்பவ னுத்தனிற் கடியேன்
றுரிசற வருள்கென் பதமிகை யென்றுந் தொழுதலே கடனெனத் துதித்தார்
சொலற்கருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௩௫)

நாரண தியான மேமுடி வாக நவில்கெனு நரநரா யணர்சொன்
னயந்தனு சரித்துக் கேவலாத் துவித நவிற்றுபா டியத்தையச் சரிதர்
பாரிய சுத்தாத் துவிதசித் தாந்த பக்கமாப் புகன்றன ரென்றார்
பரவுசித் தாந்த மெனிற்சைவ ரும்வேட் பாரென்றே வனையசங் கரர்பின்
சாருடற் றூய்மை யுஞ்சிவப் பேறுஞ் சாரவென் மனக்குடத் தன்பாந்
தந்துசூழ்ந் தின்ப நீர்நிறைத் துன்றாட் டளிர்கண்ணா னத்தெங்கு நிறுத்திச்
சோர்வில்சத் துவமந் திரபுண்ணி யாகந் துலக்கினே னென்றனைத் துதித்தார்
சொலற்கருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௩௬)

புத்தரை யழித்த லாற்பழி தமக்குப் போந்ததாப் பட்டபா தருமப்
போக்கற யாக்கை தீக்கிட னெக்கிப் புக்கசங் கரர்தமை யுணர்ந்தோ
ரெத்துணை செயினும் பதகந்தீத் துய்ப்போன் றிறமெழீஇ விவரண மொன்றீங்
கியற்றுகென் பாடி யக்கென வேண்டிக் கொண்டன ரென்றன ரிதயம்
பொத்துமாற் சரித ரனையசங் கரர்பல் புதர்மன மத்தினன் பார்த்துப்
பூட்டிநான் மறைவா ரிதிகடை இச் சோமன் புனிதகற் பகமணி தேனுச்
சுத்தவா னந்த வமுதறி ஞர்க்குத் துலக்குகின் றாரெனத் துதித்தார்
சொலற்கருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௩௭)

பட்டபா தரைச்செவ் வேளென்றா ரந்தோ பௌத்தரை யழித்ததீங் கறத்திப்
படிந்தன ரென்றார் காழிச்சேய் முன்செய் பண்புண ரார்கொலச் சரிதர்
மட்டறு பூர்வ புண்ணியா சலநல் வழியிற்றோன் றமுதமூர்த் தியனோர்
வயங்குவோன் சிவனே சுகணசே விதன்மான் மலர்கரன் விபுவிருள் மாய்க்கு
மிட்டனுஞ் சோமன் றாமன வானத் திலங்குமே லானந்த வாரி
யினிதுமேற் பொலியுஞ் சுமனர்கட் களப்பி லின்பமா மென்றுசங் கரரே
துட்டறத் துதித்த திணர்ந்தவர் சரிதர் துட்டகங் கொள்வரோ மறையுஞ்
சொலற்கருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே (௩௮)

கந்தனும் பட்ட பாதர்சாக் கியநூல் கள்ளமா யவருடன் சார்ந்து
கற்றுணர்ந் தவர்கோள் கடிந்தழித் தனராங் கலியின்வை பவமிதே தமது
சொந்தசங் கரரே வஞ்சித்துப் பயின்று துணிந்தனர் காமனூ லெனுமத்
துரிசுதீ தெனாது விளக்கினர் வேறென் சொற்றிடார் சரிதர்சங் கரர்பின்
முந்துசீ ரிராச சேகர னிதய முளரிமா நகரிற்கை வலிய
முதல்வன்வீற் றிருப்பி னாற்பத தருமமுற்செலும் பாவங்கா மாதி
தொந்தநீங் கிடுனா னானந்தோ டதிகள் சுகபலந் தருமெனத் துதித்தார்
சொலற்கருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே (௩௯)

சங்கரர் சிவனே னீசராய்க் காசிச் சார்விசு வேசனை யுணராத்
தன்மையென் விலகச் சொன்னதென் வியாசர் தமைத்துரு வியதென்கா னாதென்
னிங்கிவை முதலா பாசமொன் றும்மோர் விலாமலெவ் வுலகினு மிவைபோன்
றிராதபொய் யெல்லாம் வருந்துபு தேடி யிணைத்தொட்டி வைத்தனர் சரிதர்
தங்களுக் குதவா தொழிதலோர் கிலரச் சங்கரர் புத்தியங் கிரத்தாற்
சாற்றுவாக் கடத்துன் சரித்திரா முதமென் றன்கவிக் காற்புகுந் தனமாங்
துங்கபூ மியிலன் பாம்பயிர் பலிக்கிற் றுர்ப்பிட்ச மின்றெனத் துதித்தார்
சொலற்கருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௪௦)

வேண்டுசங் கரர்க்குப் பட்டபா தருநின் பாடிய விவரணம் விளம்ப
வித்திபா மதமெய் வயம்வலி காமங் குரோதமுன் வேண்டுமின் னவையெற்
கீண்டிலை யென்ற தாயுங்காற் பாடி யஞ்செய்சங் கரருக்கின் னவையுண்
டென்பதோர்த் திடுநான் பரமென்பா டியமு மிலக்குமிச் சங்கரர் பின்முன்
பூண்டபா தகந்தீர்ந் தருட்செல்வம் பெறநின் பூசனை துதிவலந் தியானம்
பொற்பத வணக்கஞ் சிரவண மென்றும் புரிந்தடி யேனுய வானை
தூண்டுக வீண்மோ னம்மொரு கணமுந் தன்னிடா தருள்கெனத் துதித்தார்
துணைத்தடங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௪௧)

வினவிய பட்ட பாதர்சங் கரர்க்குன் பாடிய விவரணம் வேண்டின்
விரவுநஞ் சீடன் மண்டனன் றருநீ வென்றிடி லவனையெவ் வுலகு
மிணைவுற வென்ற தாமெனல் வென்றி யேவிழை செருக்கரென் றுணர்த்தி
மிளையர்துர்க் காதிப் பிரியனீ காம்பீ ரியவகழ் தைரிய வரண்சூழ்ந்
தனையவிந் திரிய துவாரம்வித் தியாப தார்த்தநற் குணங்களாம் பலங்க
ளாதியெப் பொருளு நிறைந்தவென் னுள்ள மாந்துருக் கத்துமெஞ் ஞான்றுந்
துனியற நீவீற் றிருந்தருள் கென்று துதித்திட வருண்மது ரேச
துணைத்தடங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௪௨

மண்டனர் மனையெங் கெனவினுய் வினுய்ச்சென் மாண்புசங் கரர்சிவ னென்பார்
மருளகற் ருதா சிராத்தநண் பகலில் வன்கத வடைததபின் வாநிற்
கொண்டனூக் கத்தா லமையமோ ராதுட் குறுகிற்றே செறுவமோர்க் காதா
கோதற முற்று நீத்தவ ரெனவே கோடலெ னனையசங் கார்பின்
மிண்டுறு மாதி கிராதனீ கிரிச வேட்டைக்காங் காங்குற வேண்டா
மிகுமத மோக மார்ச்சரி யாதி விலங்கினங் துதைஇப்பிறர்க் கொண்ணுத்
தொண்டனேன் மனக்கான் வேட்டமே சபலந் துன்னியிங் கமர்ந்தரு ளென்ருர்
துணைத்தடங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௪௩)

அகம்புக லுஞ்சை மினிவியா சர்க்காற் றருச்சனை கண்டபின் ஞுத
வடுத்தது பழுதிச் சமயமென் ருெருவா தணியவா தாக்கமே யகந்தை
திகந்தமும் விளக்கு சங்கர ரன்பிற் சிறந்தமைந் தென்னுளக் குகையிற்
சேர்த்தமான் கரத்த கயேந்திர பங்க செறுவியாக் கிராசுர நாச
சகம்பர வுயிர்கொல் கிரிசமாண் புறுபஞ் சானன வெண்டிரு நீற்றின்
சவியொளிர் மேனிச் சிவகண்ட ரவமன் சார்ந்துவீற் றிருந்தன வரத
சுகந்தரும் பீதி யெமக்கினி யேதென் றுதிக்கினி தருண்மது ரேச
துணைத்தடங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௪௪)

சயிமினி வியாச ரிருவரிங் குளரிச் சமயமே நமக்கு வாய்ப் பென்றே
சங்கர ரணித்தாய்ச் சார்ந்தன ரென்ற சரிதரவ் விருவர்தஞ் சார்புற்
றயர்வகற் றுவரென் றடுத்தவுட் கருத்தை யறைந்தில ரனையசங் கார்பின்
னையவென் மனமாங் ககசிகா மணிநிற் கலம்புறத் தலைதல்வீண் விடுக
வுயர்மறைத் தருவிற் சந்தவண் கிளைக ளுபநிட சிகையுலாந் துவிச
வொண்ககா சிருத நித்திய மாயின் புறுத்தமு தார்ந்தபல் பலத்தாய்த்
துயரில்சங் கரன்பூம் பாதபஞ் சரத்திற் றுனைந்தமர் கெனநினைத் துதித்தார்
துணைத்தடங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௪௫)

சங்கரர் வரக்கண் டெங்கிருந் தெதிரீ சார்ந்ததென் பொருடரு மியற்சொற்
றருகுதா முண்டி யென்றமண் டனர்க்கென் றலைகளம் வரைமழித் ததுவென்
றுங்குணர்த் தாக ளான்முண்டி யென்றே யுரைத்துவா லியமத விடம
முள்ளன விளக்கு சங்கர ருளமா முயர்மரா ளத்தனி யரசே
யங்கிரி சாநா தாங்கிரி யாய வணிநகத் தருணவெள் ளொளியே
யவிர்பரப் பாம்வெண் சுதைதிமிர்ந் தொளிர்செவ் வரதன நிரைத்துய ரமிச
துங்கசே விதரு ளிகையிலன் பாம்பே டுகளுட னமர்கெனத் துதித்தார்
துணைத்தடங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௪௬)

உன்றலை மழித்தல் வினையதன் றிவணீ யுறுவழி வினையதிங் கிடமோர்ந்
துரைத்திலை யெனமண் டனர்வழி வினவி லுவ்வழி யெவ்விறை யுதவிற்
றென்றசங் கரர்பி னமைந்தரு ணெறிசார்ந் தீசபா வனையெனும் வசந்தத்
தியைந்தவென் மனோத்தி யானத்திற் பவமா மிலைப்பழுப் புதிர்ந்தபுண் ணியமா
மின்றளி ரன்பாங் கொடிகுண முகிழ மிருஞ்செப வாக்கலர் கிரியை
யெனுமண ஞானமு தானந்த மதுமிக் கெழும்பெருக் குயர்சிவ ஞானத்
துன்றுதண் பலமன் விருத்தியா யென்றுந் துலங்குகின் றனவெனத் துதித்தார்
துணைத்தடங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (சஎ)

வழியெது கூறிற் றிறையெனல் வினைய மண்டனர் முண்டைநின் றாயென்
வாய்மையே கூறிற் றென்றனர் பொய்ம்மை வருங்கொலோ விதியுரை வழுமோ
பழியறச் சீர் சொல் பவர்களே சரிதர் பகர்முக மனின்முறை பிறழார்
பரமனே யெனவோர் சரிதர்பல் லாண்டு பறையடித் திடினுமென் பயன்பின்
றழுவுசங் கரரென் னிதயவோ திமமீ சதானந்த நீர்நிறைந் துயர்மா
தவர்சுரர் மனும்பு யங்கொடு தெளிந்து சத்துவி சாசிரு தஞ்சார்
தொழுசிவத் தியான வரதடத் துறைதி தோயல்பல் வலத்*தெனத் துதித்தார்
துணைத்தடங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே (சஅ)

நின்னுடை யன்னை கைம்மையென் றுண்மை நிகழ்த்துமண் டனர்க்கெதி ராக
நினதுதாய் விதந்தென் றுரைத்தில தோவங் கெறியென விறுத்தன ரிவர்த
மன்னையா ரியையாம் பிதாசிவ குருவா மவர்வயிற் சிவன்பிறந் தனனு
மறைவது காந்த புராணமாஞ் சரித ளேப்பறப் புறட்டினர் பயனின்
றின்னசங் கரர்பின் ஞானந்தா முதபூ ரிதசிவ பதமலர்ப் பாத்தி
யினிலெழீஇத் தைரி யக்கொளு கொம்புற் றென்மனப் பந்தரிற் கிளைத்துத்
துன்னுமா சற்றே ரன்பெனுங் கொடிநற் றாப்பலந் தருகெனத் துதித்தார்
துணைத்தடங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (சகூ)

வாய்மைதாங் கூற வீண்சொல்சங் கரரை மண்டனர் வெகுண்டுறுற் கள்வாய்
மடுத்திடப் பட்ட தோவெனுங் கருத்தாற் சுராபிதா வென்றனர் வாய்மை
யாய்மைவிட் டிதுகள் வெண்மையே பொன்மை யன்றென விளம்புசங் கரர்பின்
னவிர்சந்தி கால மலர்ந்துவண் சுருதி சிரத்தலா திட்டித மாகித்
தாய்மையார் பிரேம பிரமரா பிராம சத்துவா சனுவிளக் கச்சீர்
சார்ந்துபோ கேந்த்ரா பரணவொண் சுமன சகலபூ சிதசிவா லிங்கத்
தூயபர்ப் பதமல் லிகார்ச்சுன லிங்கந் தொழுவலென் றமைந்துணைத் துதித்தார்
துணைத்தடங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (ருo)

* பல்வலம் நீர் வற்றிய சிறுகுண்டு.

கள்வனை மறிதி முண்டிநீ யெனச்சங் கரர்வனை மறிவனீ கள்ளின்
கழிசுவை யறிதி யென்றிவ்வா றுகைக் கருதுபற் பலவுரை யான்றே
ரென்வனை புகன்று ரிவர்பினர்ப் பிருங்கி யின்புற நடஇக்கரி மதங்கொண்
டிலங்குமா தவாசை யெய்திநா தஞ்சார்ந் தெழின்மகா சிதவுருத் தாங்கி
யொள்வனை மதனு தரக்கிட னுகி யொளிர்சும னேவனை சுபக்க
முதீஇப்பருப் பதஞ்சார்ந் தம்விபு வாகி யுறுபிர மாதிப சிவனுந்
தன்வனை மான்கை வண்டென திதயாம் புயத்தமர்ந் தருள்கெனத் துதித்தார்
சுகப்பெருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௫௧)

வம்புனை யளப்பின் றுரைத்தசங் கரரை வணங்கித்தஞ் சிராத்த பூசனைக்கு
வரித்தன ராமண் டனர்சங்கி யாசி வர்ச்சித சிராத்தமாண் பழகே
சம்புதண் கருணை முதம்வரு டித்துச் சார்கன விபத்துவெப் பொழித்துத
தக்கனா னேட திகள்பலித் திடற்கா தரபுநர் வேண்டல்பெற் றிச்சா
கம்*புனைந் தன்ப ராயநிர்த் தனகே கயக்குழாங் களிப்பவெற் படுத்துக்
கவின்றசை சடாமண் டலங்கொளு நீல கந்தர கந்தர நினையே
தன்பிலென் மனச்சா தகம்விழை மெனப்பின் றுதித்தன ரனையசங் கரரே
சுகப்பெருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௫௨)

மண்டனர் மனைமுன் றனிச்செல்சங் கரர்பின் மாணவ ராயபல் லோர்கள்
வதியிடம் விரைந்துற் றழைத்துடன் புகுந்த வாதமாண் போதலென் னிதன்மேல்
விண்டல சிகிவெம் பணீந்திர கலாபி மெய்யன்பர்க் கருள்பிர ணவமுன்
விளம்பலிற் கேகி கானிவெற் புதய மேசமே தேகபார்ப் பதியைக்
கண்டெழு களிப்பா னருணடம் புரீஇவே தாந்தவுய் யானத்துக் கவினக்
காதன்மிக் குலாவு நாதனு நீல கண்டகே கயத்தையுட் கொண்ட
தொண்டனெவ் விடக்கு மஞ்சிடே னென்று துதித்தன ரனையசங் கரர்பின்
சுகப்பெருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௫௩)

தனிமையிற் சார்ந்து கலாம்புரீஇச் சிராத்தத் தகுமுணற் கிணங்கியுண் டேன்மண்
டனர்க்குஞ்சொல் லாது மாணவக் குழாத்தைச் சடிதிகொண் டெற்றசங் கரர்பின்
புனிதநற் சந்த்யா காலங்கார்·காலம் புகல்விண்டு கரமுழ வொலியம்
புதவொலி புதாம் பகங்கள்சஞ் சலைகள் பொய்யறு மன்பர்கண் ணன்பே
கனியுநீர் வெள்ள மழைசிவை யுள்ளங் களிமயிற் பேடெனக் கொண்டெக்
காலமு மொருவா நடம்புரி நீல கண்டவண் சேவற்கே கயத்தைத்
துனியறத் துதிப்ப லெனவவர்க் களித்த தூயனே மதுரைநா யகனே
சுகப்பெருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௫௪)

*இச்சை ஆகம் எனப்பிரிக்குக

சங்கரர் பிரம மொன்றதே நித்தஞ் சார்தரு மனுதியஞ் ஞானத்
தான் மறைப் புற்றுங் கிப்பியில் வெள்ளி தகவிரிங் துலகெலாந் தானாய்ப்
பொங்கொளி செயுமப் பிரமஞா னத்தாற் பொன்றவஞ் ஞானமிப் பவஞ்சப்
புகலொரீஇப் பிறப்பற் றிலங்குதா னுதல் புகன்முத்தி யென்றுவா துரையுச்
சங்கரர் முதல்வ வளப்பிலி வேத சானவன் பருக்கருள் வடிவ
சச்சிதா னந்த முச்சக பால தாண்டவ சடிசிவ யோகர்
துங்கமா தியேய சம்புவென் னமங்கின் றுணையடிக் காகெனத் துதித்தார்
சுகப்பெருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (ருரு)

பிரமமொன் றேநித் தியம்பிறி தொன்றும் பேச்சிலை யென்றன ரின்னேநந்
பிறங்கிடா வுண்டே லழிந்திடா வுண்மை பெருமறை சிவாகமா திகண்முப்
பொருளுண்மை யுணர்த்த வறிதிஞ மேகம் புகல்வதொவ் வாதெனு முணர்ச்சி
புனிதநின் னருளி னன்றியுண் டாங்கொல் புகன்றவச் சங்கரு ருன்பே
ரருளினித் தியனெண் குணன்புர கரன்சி வாபதி யாதியில் லறத்தா
னன்பர்செம் மனத்தன் மாயைகா ரியலோ காதிதன் றுண்டவன் சடேசன்
றுரியனுக் காகென் னமவெனப் பராய்மெய் துணிந்துனைப் பணிந்திட வளித்தாய்
சுகப்பெருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (ருசா)

இயம்பரும் பிரம மவித்தையான் மறைந்த தென்றுரை பாதக வலிமுற்
றிரித்தருள் புரியப் பெற்றசங் கார்முன் னிகழ்ச்சியுந் திகழ்த்தியாங் கிறைவ
நயந்துநா டொறுமென் னுதரமோம் புதற்கே நலிபொரு ணசையுறீஇ யங்தோ
நண்ணுபற் பலரைக் கருதிவீ ணுக நாற்றிசை களுந்திரிந் துழன்றேன்
பயன்செய்நின் பூசை யறிகிலே னையுநீ பரவு சர் வாந்தரி யாமிப்
பண்பினுற் புரக்கும் பாக்கியம் பெற்றேன் பண்டுசெய் தவத்தினு லென்னூர்
சுயம்பிர காச சொரூபனே நாயேன் றுரிசறுத் தருண்மதி ரேச
சுகப்பெருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (ருஎ)

தன்னொளி யாலெப் பொருளுமெஞ் ஞான்றுந் தான்விளக் குவதலான் மறைப்புட்
சருவஞ்ஞ தாதி யெண்குணப் பிரமஞ் சாருமோ வவித்தையுண் மறைந்து
பின்னுபு கிடப்ப தாவியே யதையே பிரமமென் றெழுபசு ஞானப்
பெருமிதஞ் சிவஞா னத்தையோர் காலும் பிறக்கிடா தகம்பிர மக்கோ
ளின்னிலை யருதென் றுணர்ந்துசங் கரரோ ரிரவிமுற் றிருளிரித் திலங்கு
மிரவிபல் கோடி யொளியவோ ரொளிய னிருளிரித் தருள்கிலை யெந்தாய்
துன்னிரு ளறநீ தோன்றலே போதுந் தோன்றலே யென்றுமின் றுதித்தார்
சுகப்பெருங் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (ருஅ)

பிரமமொன் றிப்பி வெள்ளிபோற் பவஞ்ச பேதமா விரிந்தது பிராந்தி
பேசின்மெய் யலவென் றனரிரு நிறமோர் பெற்றியால் வெள்ளியென் பிராந்தி
மருவலா முருவொத் தொன்றினொன் றல்லால் வகைபல வாமய லுறுதோர்
மாண்பிர மம்பல் வடிவல கிலாப்ப வஞ்சமாத் தோன்றுமென் பதுவி
னுரையெனத் துணிசங் கரனங் கோகஞ் சாதகஞ் சகோரமொண் கமல
வோடைவெங் கதிரோன் முகின்மதி களோ டொறும்விழை வுறலினென் னுள்ளஞ்
சுருதிநா யகனே பசுபதே நின்றாட் டுணையையே விழைமெனத் துதித்தார்
சுகப்பெருங் கயற்கண் வாமவன் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௫௯)

ஒன்றெனிற் பிராந்தி யுற்றதப் பரமா முதற்கஞ்சி யதற்குவே றுளதென்
றுரைத்திடி லேக வாதப்பாழ் நியம மொழிந்திடு மதுவிவ காரத்
தென்றிடிற் பரமன் றொன்றிலா விடத்தஃ தெய்தரு தித்தலை யிடர்ப்பட்
டிசைப்பதே னிசைத்து நிலையுறு தெனச்சங் கரர்பெரு நீரிலீர்ப் புண்டோன்
சென்றிடு பதிகன் மழைநனை வோன திதிவறி யவன்றமத் தினைவோன்
சீதபீ டிதன்கோ* டின்னிழன் மனையில் லறவன்றூர் மிகன்சுடர் தீயைத்
துன்றுற விழைதல் போற்சிவ பதத்திற் றோய்தியென் மனமெனத் துதித்தார்
சுகப்பெருங் கயற்கண் வாமவன் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௬0)

ஏகமே யெனவல் லுடம்பினிற் பற்றி யிடருற்று மதீதமாம் பிரம
மிருண்மறைப் புற்ற தென்றுபா தகஞ்சார்ந் தேகவா தத்தினை யிறுத்த
லாகமா யிருளொன் றுடனிரண் டாக்கி யலக்கணுர் கலக்கம்விட் டருட்சார்
படுத்தசங் கரர்தன் பீசமூ சிகள்கு லாங்கனை லதைந்தி விரிபல்
சாகையங் கோலம் பசாசந்தன் பதிநீ டருவுத திகளைச்சார்ந் தாங்குன்
றூனிலென் மனஞ்சார்ந் திருக்குமெய் யன்பே தருகென வருளிய தலைவ
சோகமுற் றொழித்தென் றுகமுற் றளித்துத் தூய்தருள் கூடல்வாழ் சுடரே
தொழிற்கு‡றழ் கயற்கண் வாமவன் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௬௧)

இயல்பதாப் பாச நீக்கமார் பிரம மிருண் மறைப் புறுவதெங் கந்தோ
வியல்பதாப் பாச பந்தமார் சீவர்க் கிசைத்தனை யதன்றலை யேற்றிச்
செயலில்சீ வான்மா சிவபர மான்மாத் திகழ்த்தவுஞ் சுருதியொன் றென்றே
செப்புசங் கரர்பி னன்பரூஞ் சிசுவைத் திருந்துமன் பென்னுமா தாயின்
னுயலருள் பாவ னுபரி யங்கத் துய்த்துக்கண் ணீர்முழுக் குபுநீற்
றுடன்மணிக் காப்பு முருற்றிநின் மலத்தூ சுடுத்துவாக் காயசங் கினிலுன்
றுயர்†சரி தாமு தார்த்தியோம் புவளென் றுநிக்கினி தருண்மது ரேச
தொழிற்குறழ் கயற்கண் வாமவன் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௬௨)

*கோடு-நீர்க்கரை. ‡தொழிற்கும் என்னும் உம்மை தொக்கது †துய்-இடைக்குறை.

பதிபசு பாச நித்திய மேயெப் பாங்கினும் விளக்குப நிடதம்
பலவுள வவித்தை யாவரிப் புரையு பநிடம்புற் கலபர மேயா
மிதுநிச மெனத்தேர் சங்கரர் மார்க்கத் தியங்கித்தேப் செருப்புறற் கூர்ச்ச
மீசநின் மேனிக் கினிதபி டேக மிரங்கிவாய் நிறைந்தநீ ருமிழ்தல்
புதியனை வேத்தி யஞ்சிறி தெஞ்சப் புசித்தவூன் கவளமா கின்ற
புனிதமெய் யன்ப சிரேட்டரா கின்றார் புனமடு வனசரர் பரம
துதிதரு பத்தி யாதுசெய் யாதென் றுதிதர மதிதருந் தூய
தொழிற்தறழ் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௯௩)

சித்தினி லசித்தாஞ் செகம்விரிந் துளதாச் செப்பிடச் சிற்பரத் தினுக்கத்
திங்கற விவர்த்த மாவுள தென்றச் செப்பநிர் நம்மென றிகழப்
பித்துரைஇச் சுவேதாச் சுவதராஞ் சிகையே பிருகச்சா பாலங்கை வலியம்
ரேடுறு மீசா வாசிய மாதி பேசுமெ யோர்கிலார் மயங்க
வைத்தசங் கரர்நின் மெல்லடி மறலி வல்லுரந் துலைத்தல் வன்கயிலை
மலைமுய லகன்மீ துறல்சுரர் முடிகண் மருவன்முற் கடுஞ்செயற் றனைய
சுத்தமெல் லடிக்கென் மனமெனு மலர்ப்பா துகைகொள றருமெனத் துதித்தார்
தொழிற்குறழ் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௯௪)

இருளினுன் மறைப்புண் டசித்துல காகு மிதுபா மாமிரு ணீங்கி
யினிதுதா னேதா னுயிருந் திடல்பே ரின்பமாம் வாதமற் றிதுவே
தெருளின்மண் டனரை வென்றதாஞ் சரிதர் செப்புவ தொப்புவ தெவரே
ஓதொழித் தருள்சார்ந் தனையசங் கரருன் றிருத்தொண்டர்க் காணின்வெங் கூற்று
மிரியுமார் புதைக்கு வெருண்டிமை யவர்வந் திறைஞ்சுபு முடிமணிச் சுடர்க
ளிலக்குநீ ராஞ்ச னஞ்செய்வர் முத்தி யின்பமா திறுகுறத் தழுவுந்
துரியநின் றொண்டர்க் கரியதே தென்று துதிக்குமா றருண்மது ரேச
தொழிற்குறழ் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௯௫)

மண்டனர் தமைவென் றகம்பிர மக்கோண் மதநிறீஇ மகிழ்ந்தன ராம்பின்
மனையவள் வினவுக் கிறையின்றித் தவனை வழங்கென வேண்டின ராமா
லுண்டவா தும்பின் வென்றன ராமிவ் வுரையென்னு மனையசங் கரரிவ்
வுலகெலா மளிக்குந் தலைமைநின் பாற்றே யுலகில்யா னொருவனே யுள்ளங்
கொண்டிடா தெளியேன் பிழைபொறுத் தேன்று கொண்டருள் புரிகெனத் துதித்தார்
கூடல்வாழ் முதலே யேடல ரிதழிக் கோமளத் தாமவான் குடிலை
துண்டவெண் பிறைசேர் வேணியெம் பெரும தொண்டனேன் றுரிசறுத் தருளாய்
தொழிற்குறழ் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௯௬)

சென்றுசங் கரர்மண் டனர்மனே புகன்ற சித்தச நூற்பெரு வாதஞ்
செயநமக் கந்நூ லுணர்விலே யேயென் செய்தமென் றெங்கணுந் திரிந்து
நன்றுண ராக்கா முகர்செயல் பிடித்தி ராசபத் தினிகளூற் றுவரை
நவையுறப் புணர்ந்தே யுணர்ந்துவென் றகந்தை நண்ணியு மனேயர்நின் னருளான்
மன்றபல் விதவா னந்தசித் தியக்கண் மழைபுள கிதமுதல் வயக்கு
மாண்சிவ போக நிலையதாய் மோக்க வாஞ்சையர் சூழ்வதாய்ச் சிவமே
தன்றுபா வனேயே சரணென வடைந்தேன் றுரிசினே னெனுந்துதிக் களித்தாய்
தொழிற்குறம் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (சுஎ)

ஐயவென் சொல்கே ளமரக வேந்த னுவிநீங் குடல்புகூஉத் தம்மெய்க்
கரண்புரீஇக் காப்பச் சீடரை நிறுவி யரசபன் னிகளுட னொருவா
தய்யலில் காமத் தழுந்தியவ் வுடநீ யுற்றதோர்த் திடப்புகுஞ் சீட
ருணர்த்துமக் குறிப்பு முணர்வற விருந்தா ருத்தகு சங்கரர் பின்னுண்
மையணி களநின் றிருவடித் தோழம் வசித்தன வரதமின் பமுதம்
வழங்கிநற் றருமப் பயனதா யொன்றாய் வயங்குமென் பத்தியாம் பசுவைத்
தய்யனீ தளரா வணம்புரந் தருளென் றுதிக்கருண் மதுரைநா யகனே
தொழிற்குறம் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (சுஅ)

அரசபன் னிகளேப் புணர்ந்தமர் கான்மெ யங்கியுற் றெரியவு மறியா
தடுத்தவ ருணர்த்து குறிப்புமோ ராம லங்கங்கள் வெந்தழி யவதி
விரைபணி மையிற்றத் தவமசி சீடர் விளம்பிட வையமேற் குநர்போன்
மேற்றெளிந் தரச னுடலொரீஇத் தமது வேகுமெய்ப் புகுந்தசங் கரரைப்
பரசிவ னெனவே பரிபவ மயர்ந்து பகர்பவர்க் கினியறை வதையென்
பசுத்துவங் களங்கஞ் சடத்துவங் குடிலப் படர்ச்சியென் பாலுறி னனேய
துரிசின்மா மதியோற் கோடியென் றிறைஞ்சித் துதித்தன ரனேயசங் கரரே
தொழிற்குறம் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (சுசு)

அமரக னுடல்புக் கிடையறாக் காமத் தழுந்திய துலகெலா மறிய
வமரக மெனவோர் மதனநூல் செய்தா ரங்கியி லெரியுடற் புகுந்து
நிமிரொரு நினேந்து நராரியைத் தொழமுன் னின்றது கைப்பற்றித் தூக்கு
நிலையினேக் கராவ லம்பமென் றுதியா ளிகழ்வுறக் காட்டுசெங் கரர்பி
னமிதநற் பலதன் பிரசன்ன மூர்த்தி யாசசே கான்சக ததித
னும்பசு பதியென் மனத்தில் வீற்றிருந்த லாலகம் புறத்தொண்டாற் றிடநான்
சுமுகனுய்ச் சொலப னுகின்று னென்று துதித்திட வருள்புரி தூய
தொழிற்குறம் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (எ0)

டோம் பதும பாதராத் திகமுற் சிந்தைவா சனையினல் வேந்தன்
றேவியர்ப் புணர்த தீமையென் றிதமே செப்பவும் பிரமஞா னிகட்குக்
கேடுறு விதிநி டேதமு மின்றெங் கிளர்துற வினமின் றென்றே
கிளத்துபு காமப் படுகுழி யாழ்ந்தெக் கேடுஞ்செய் வாரகம் பிரம
தோடரென் றெவர்க்கும் விளக்குசங் கரர்பின் சுபுத்திமான் வணக்கவி லன்பாங்
தூயநாண் பூட்டித் தியானபா ணத்தாற் றொடர்பவப் பகையறுத் திந்து
சூடவின் புடனித் தியவருட் செல்வந் தோய்கின்று னருள்கெனத் துதித்தார்
சுதர்க்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (எக)

சகமய லுற்றுர்க் கலதகம் பிரமச் சார்பினர் பிரமகத் தியாதி
சாற்றரும் பவம்பல் கோடிசெய் யினுமென் றூழ்வுறுர் கண்ணனுய்ச் சியரை
மிகவிழைஇக் கலந்தும் வெறுக்கப்பட் டிலன்முன் விச்சுவ ரூபனைக் கொன்ற
வேந்தன துரோமத் தினையும்வீழ்த் திலதவ் வேதியப் பழியென்று ரதுபின்
றகுபரி காரத் தழிந்ததோர் கிலர்கொல் சங்கரர் பின்பெவர் தமமாய்
சம்புதா ணிதிபா வனுஞ்சனத் தாலீ சன்றிரு மந்த்ரசா தகத்தாற்
சுகமுறக் காண்பா ரவர்கிரு தார்த்த ரெனத்துதித் தின்னரு டோய்ந்தார்.
சுதர்க்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (எஉ)

இந்திர னசுரர்க் கஞ்சியே துறப்ப வெண்ணின னுசைமுற் றிரித்தன்
றென்னுமெய் யுணர்பொன் னரசிய னிலைத்தற் கிசைத்தகா லோசித நிலைத்தா
மந்தநான் முதற்பல் பந்தநா லுலகெ லாமயக் கற்றல்போ தாதா
வமரக மதநான் மங்கையர் கலப்பே யரியபே ரின்பென வறைந்தார்
நந்தகம் பிரமக் கோட்பிணிப் பெதுதா னவிற்றிடா தனையசங் கார்பி
னன்னெஞ்ச மேசீ தான்களி றுயு நணுகொளுத் திருவடி நளினந்
தொந்தமின் மோக்கம் விளைநில மதையே தொழூஉவிரைந் தடைகெனத் துதித்தார்
சுதர்க்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (எங)

பழுதிது வென்ற பதுமபா தரையோம் படுத்தவோ தியபல விருக்கப்
பரவுகா மாரி யஞ்சுமோ மதற்கப் படிநமக் கின்றென வேகித்
தழுவுமின் பழுந்தித் தம்மெய்தீப் பட்ட தாமுமோ ராதுதஞ் சீடர்
சமிஞ்ஞையோ ராது தத்துவ மசிச்சொற் சார்பினேர்ந் தகன்ற சங்கரர்பின்
முழுமுதற் பாகின் னடிக்கம லங்கண் மூடனே னுளத்தி ஞசாதி
முடையழித் தருண்மா மணங்கமழ்ந் திலங்கி முதந்தர வருள்கென மொழிந்தார்
தழுவமாற் கரியாய் நின்னருட் பெருமை சொல்வதென் கூடல்வாழ் சுடரே
சுதர்க்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (எசு)

இருவினைத் தொடர்பிங் கெமக்கிலை யதனு லிவ்வுட லேமடந் தையர்ச்சேர்ந்
தின்பமார்ந் தறினும் பழுதிலை யுலகத் தின்பொருட் டான்றவ வொழுக்க
மரபுகாத் தயலோ ருடம்பினுற் கல்வி வகைபயின் றுணர்வமென் றுரைத்து
மறுத்திடப் பதும பாதரென் செய்வர் மாணவர் மறுத்தில ரவர்தம்
விரதமாண் புண்மை யுணர்வர்மே லவர்காம் விளம்பலென் னனையசங் கரர்பின்
விடையிவர் பரம விசித்திர கமன வேகவிங் கிதத்தவென் மனமாந்
துரகநிற் கிதமே யிவர்ந்தருள் கென்று துதிதர மதிதருந் தூய
சுதர்க்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௭௫)

மண்டனர் மனையை வென்றதென் சமழ்ப்பே வாணியா மனையளை வணங்கி
வயம்பெற வருள்கென் றிரந்துவேண் டுற்றவ் வரம்பெறு சரிதமே வயக்குங்
கண்டனங் கலியின் வண்ணமென் றலகங் கழறிட மங்கையர் கலவிக்
கடற்படிந் தாகூழ் வலியினு லெழுசங் கரரெவ னுளத்தடஞ் சிவன்றுள்
விண்டலத் தன்பு முகில்பெயா னந்த வெள்ளத்தா னிறைவுற மவன்றன்
வினைப்பவப் பயிர்கண் முழுதுநற் பயனே விளைந்துமுற் றுறுமெனத் துதித்தார்
துண்டவெண் டிங்கள் கங்கைதண் கொன்றை துதைந்தருள் விளக்குசெஞ் சூட
சுதர்க்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௭௬)

மண்டனர் மனைபா ரதியைச்சா ரச்சு வதத்துதி புரிந்துபின் மதநூல்
வாதில்வென் றவளை நிறாஉமிடத் தமரும் வரம்பெறீஇ மண்டனர் துறவு
கொண்டபின் பதியை யிழந்தமங் கையரிற் கோலத்தா பதநிலை யேமேற்
கொளுமவ டனைச்சங் கரர்நிறு வியதாக் கூறுமாண் பழகிதே யவர்நின்
வண்டுணை யடியே விரகிணி* போலென் மனநினைஇச் செபதியா னுதி
வகைபுரீஇ மோகித் தினைகின்ற தருணீ வழங்கியின் பருள்கென வழுத்தித்
தொண்டிறை நிலைமை விளக்கினர் மதுரை தலங்கவீற் றிருந்தருள் சுடரே
சுதர்க்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௭௭)

சீடர்பற் யலருட் பதுமபா தரைமுற் றிகழப்பன் னுட்கொள்சங் கரர்பின்
சிறப்பமண் டனர்க்கொண் டுரைதம்பா டியக்குச் செய்விப்பப் பாதருட் புழுங்க
னுடியே னையர்சொல் வனவுனோக் கார்முன் னயப்புணர்ந் திரிந்தனர் பாதர்
நணியமற் றவரும் விகற்பித்தா ரிவைமு னன்குணர் வாருண்மை தெளிவர்
கூடுசங் கரர்நின் பணிநனி பயின்று கோதகன் றிதங்கள்பெற் றமைந்து
குழையு மென் னுளத்தை வாகுண மதனுற் குலப்புது வதுவெனக் கொன்றை
சூடிய பரம கோடியென் றன்பிற் றுதித்திட விதித்தருள் சுரேச
சுதர்க்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௭௮)

* விரகிணி-தலைவற் பிரிந்து காமவிகாரமுறுபவள்.

அகம்பா மதமிக் கசம்படி யாதிவ் வவனிமுற் றூர்வமுற் றேடி
யகந்தைதாம் விளக்க லன்றியுஞ் சீட ராயினோர் பலருமவ் வாறிச்
சகம்பட நூல்பற் பலசெய லூக்கித் தாமுஞ்செ யிடையறா வூக்கஞ்
சாற்றரி தந்தோ வனையசங் கருன் றுளடி யவர்மன மலர்சார்
மிகும்பரி சயத்து நனிமிரு துளத்து வெம்மறல் கன்மலை மார்பில்
விசையினி லுதைத்த துனியுனி வருந்து வினையினேன் கட்கெதிர் காட்டிற்
சுகம்பெற வருடி யிதஞ்செய்வல் சம்போ துனைந்தருள் கென்றுபின் றுதித்தார்
சுதர்க்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (எகூ)

தாய்தக னமுந்தாஞ் செயவிழைஇ மகத்தீத் தாவினுப்த் தாமையி னவ்வூர்த்
தகுமனை முழுது மயானமா கெனப்பல் சாபந்தந் தப்பிண மயான
மீயிடச் சுமப்பா ரின்மையா லெரியவ் வீட்டில்வைத் தச்செயன் முடித்த
வீரமுஞ் சிவன்சங் கரனெனும் பொய்க்கோள் விளக்கலை மறைத்திலர் சரித
ராயசங் கரர்மேற் பிறக்குமென் மனக்க லடுக்கலி னடிக்கவே முறையி
னலர்ச்சய னந்தண் டளிகள்வே திகைமுன் னடுத்துப்பின் வெற்பமர்ந் தைய
தூயமெல் லடிகள் பழக்கினை யெனப்பின் றுதித்துண்மை துலக்கினர் சுகுண
சுதர்க்கருள் கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (அ0)

சம்பந்தா தியாற் புதத்தினு மதிகஞ் சங்கரர்க் கறையவேட் டொருசேய்
தனையுயிர்ப் பித்தல் கராங்குளிர் சுரமோ சனமுதற் பலவுரை தந்தார்
வெம்புந்தீ யிடைமெய் வேவதோ ராமை மேலெழ வொணுமைவெந் நோயின்
விரணஞ்செந் நீர்தோய்ந் தாடைதூர் நாற்றம் வீசன்முன் விசேடமும் புகன்றூர்
நம்புந்தன் மையதே தனையசங் கரரெந் நாதநின் பூசனை தியான
நமத்தல்சீர் கேட்ட றரிசனந் துதிமுன் னயந்துசெய் பவனெவ னவனே
துன்பந்தீர் சிவன் முத்தனு மென்று துதித்துய வருண்மது ரேச
சுரர்க்கிறை கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (அக)

வாதிடை வேறற் குணர்வல மாயு மகிபர்பற் பலருடன் சேறல்
வயப்பயங் காட்டற் கன்றியா தோதம் வழிப்படார் தமைநா வரியாற்
காதுவித் திடலெம் முறையிது போற்பல் கரிசெலாஞ் சரிதர்நற் கனமாக்
கரையினு மோர்வர் பெரியர்சங் கரர்பின் கவின்விடை பாணமிர் தங்கி
பாதிமெய் பாரி கேழன்முன் னுருவம் பரித்தமா னின்பத மலர்க்கட்
பதுமமிட் டலகோம் புதன் முதன் மகிமைப் பண்புபெற் றனனுமா பதிநின்
துதியருச் சனையே கதியெனத் துணிந்து துதித்தனர் கூடல்வாழ் சுடரே
சுரர்க்கிறை கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (அஉ)

சிதம்பரந் தனில்யோ குநீ இச்சிவ கங்கா தீர்த்தமுண் டாக்கினர் காஞ்சித்
தேவிமுன் காம யந்திரஞ் சேடன் சிலைத்தன கலாயந்தி ராதி
விதம்பல புரிந்தா ரென்றன ரவற்றின் விளக்கங்கண் டப்புரா ணங்கள்
விளக்குமெய் யவையு மகம்பிர மக்கோள் விருத்தமென் பதுமுணர் கிலராற்
புதம்புகல் சரிதர் பிறப்பிறப் பலக்கட் புங்கவ ராற்சிறு சுகமும்
போந்திடா தைய மின்றவை யிலாத புராரியைப் போற்றுந ரேபச்
சுதந்தரன் வீடும் பெறுவரென் றிறைஞ்சித் துதித்தன ரனையசங் கரர்பின்
சுரர்க்கிறை கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே (அ௩)

சங்கரர் நீல கண்டரைச் சார்ந்து தமதுகோட் கேவலாத் துவிதஞ்
சாற்றுபு சிவாத்து விதமறுத் தொருமை தாங்கொடு நட்டன ரென்று
ரங்கவ மதிப்பா னராரியை யேவி யதுதிரிந் தாற்றிடர்க் கஞ்சி
யவரடி பணிந்து தீக்கைபெற் றுய்ந்த வருட்கதை கேட்டிலர் சரிதர்
மங்கள மலைமான் மணாளனீ குடும்பி மற்றுங்கள் கைங்கரி யக்கோர்
வனிதைவேண் டும்மென் புத்திகன் னிகையை வழங்குவன் மணந்துள மனையிற்
றங்கமார் தாவீற் றிருந்தருள் கென்று துதித்தன ரனையசங் கரர்பின்
சுரர்க்கிறை கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (அ௪)

மண்டனர் பாற்றங் கோணிலை விவரம் வயங்குமா றென்றென்ற வழங்கி
மறுத்தன ரவர்கோள் சங்கர ரென்ற வழுப்பொதி சரித்திரர் நீல
கண்டர்பாற் சிவாத்து விதமறுத் தொருமை கண்டன ரென்றொரு சொல்லாற்
கழறிற்றே வஞ்சக் கருத்தினை விரித்துக் காட்டுமெச் சங்கர ரிந்து
கொண்டசே கரநான் கடன்மதிப் பரஞ்சார் குதல்வன வேட்டங்கட் கமலக்
கொடைசெய வாற்றே னுணவணி துகில்பூக் கொண்டுனைப் பூசிப்ப தெவனுந்
தொண்டனே னெளிமை கண்டுநீ யேயென் றுரிசறுத் தருள்கெனத் துதித்தார்
சுரர்க்கிறை கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (அ௫)

சாத்தமா மதத்தைக் கடிந்திட முயன்றச் சத்திகோ பத்தினல் வருந்தி
சவுந்தரி யலக ரித்துதி செய்தார் சங்கர ரென்றவிச் சரித
ராத்தரா நீல கண்டர் பாற் சிவதீக் காதிபே றுற்றதை யவிர்சி
வானந்த லகரி சிவபுசங் காதி யன்புநூல் சொற்றதை யறையார்
தீர்த்தசங் கரர்பின் சிவைபதே பூசைத் திரவியஞ் சேர்த்தென்மா வன*மாங்
திறவிலே னிருந்து மடிமுடி யவருந் தெரிந்தில ரவைதெரிந் தடியேன்
சோத்தஞ்செய் தெங்ஙன் பூசிப்ப னீயே துலக்கியேற் றருள்கெனத் துதித்தார்
சுரர்க்சிறை கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (அ௬)

* மா-அனம் எனப்பிரிக்குக. அனம் இடைக்குறை.

ஏகமே பிடித்துச் சகசடம் பரசித் திடையுறு மென்றலொவ் வாதென்
றியம்புற நீல கண்டர்சங் கார்சித் திடையசித் தசித்திடைச் சித்துண்
டாகலாஞ் சிலம்பி நூலுங் கோமயக்கீ டங்களும் போலென வறைந்த
தாயொரு சரித ரிசைக்கின்று ருவமித் தவற்றினுள் ளீடறிந் திலர்பின்
பாகசங் கார்நிற் கசனமோ கரளம் பணிபணி தகிலத மூர்த்தி
பழவிடை யிவற்றின் வேண்டலே தென்க்குன் பதாம்புயத் தன்பொன் றே பரவிச்
சோகற வேண்டற் பாலதிங் கதுவே துணையருள் கெனத்துதித் தனராற்
சுரர்க்கிறை கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௮௭)

சிலம்பியி னுடம்பே நூற்குபா தானஞ் சீவனுஞ் சித்தத னிமித்தத்
திகழ்பசு மயமப் புழுவுடம் பலதுட் சித்தினைத் தந்திடா திதனு
னலந்தரு சித்திற் சடமுற லாதி நவில்வது பழுதெனச் சைவ
நன்னெறி சார்ந்தோர் சங்கரர் சாம்ப நரலையிற் குரம்புசெ யாற்றல்
பிலம்புக விந்த கிரியினை யழுத்தல் பிரமனைக் கடத்தலெற் குளதேற்
பேசுநின் பூசை துதிதியா னஞ்செய் பேறுண்டென் றிறைஞ்சிமும் மலச்சார்
தொலைந்திடாப் பசுவே தாமெனும் வாய்மை துலக்கவு மயக்கறுர் சரிதர்
சுரர்க்கிறை கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௮௮)

அரதத்தர் முதலோர் குழுற நீல கண்டராண் டமர்ந்தன ரென்று
ரவரருட் சரித மறிந்திலா துணிந்தி தறைந்தது முழுப்பொய்யே யளக்கும்
விரதத்தை மறவா விளக்கமே யிருவர் மேதினிப் போந்தருள் கால
வேற்றுமை யதிசேய்த் துவைத்துமென் பயனே விளங்கில ரனையசங் கார்பின்
வாதத்து வங்கள் கடந்தநீ திண்கல் வன்சிலை வேத்திரா திகளின்
மகிழ்ச்சிமிக் குறுதி நமதுதி தியான வகையி னத்துணையிலை நினக்கா
தரதத்து வம்மே தருளினஃ துடனே தொடங்கியுய் குவலெனத் துதித்தார்
சுரர்க்கிறை கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௮௯)

வாதிடைத் தோற்று வபிநவ குத்தர் மனுமுறை யேவவாற் றுமன்
மடங்கிற்று மேற்சங் கரர்பல சபையில் வலிந்துபற் பலபுல வோர்க்குத்
தீதவ மான யேபுரீஇக் கல்விச் செருக்குடன் றிரிந்தபா தகங்க
ளேர்ந்திட முன்னை யேவலேற் றனராஞ் செம்புண்ணீர் நோயுங்கொண் டனராங்
தாதர்சொல் சரித மழகிதே யனைய சங்கரர் புலன்கணீத் தொருமை
சார்ந்திடற் கசத்தன் றுடலை வணங்கல் சரித்திர முரைத்தலென் மனத்தாற்
சோதிமர மேனி சேவித்தல் புரிவன் றெண்டனேற் கருள்கெனத் துதித்தார்
சுரர்க்கிறை கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசேகரனே. (௯௦)

மூலனோ யிரத்தங் காலச்செந் துகிலு முடைப்பட வருந்திப்பண் மருந்தி
முயன்றுந்தீ ராம லகம்பரத் துணையு மோசமாய் வைத்திய பதியை
யேலுமா துதித்தஃ தேவலென் றுணர்ந்தே வினைக்கொல் வித்தொழித் தனரா
மிறுகவா ணவத்தாற் பிடிப்புண்ட பசுவா மிவர்சிவ னென்றனர் சரிதர்
சாலவா நகையே யனையசங் கரர்பின் சந்திர சேகர வெனைமுன்
சூரிரு ளருளா லிரிந்தமெய்ஞ் ஞானஞ் சார்ந்தது மோக்கபாத் திரமாஞ்
சூலவேற் கரநின் றிருவடி மலரே தொழுகின்றே னென்றுனைத் துதித்தார்
தொழத்தகு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௬௧)

என்னையிவ் விந்தை தானேதா னாகி யிருந்தலே முத்தியென் றெவர்க்கு
மிசைத்தசங் கரரீற் றரியய னாதி யெவருஞ்சூழ் தாவிடை யிவர்ந்தே
துன்னினர் கயிலைக் கென்னவா லால சுந்தரர் தமினுமேற் சொலுமாற்
சுழலிற்பட் டுரைத்தா ரவர்தமிழ் மறையிற் சொன்னவா றிவருமெங் கேனும்
பன்னின ரோவச் சங்கர ரெனைமுற் பற்றகந் தாதி*நின் னோக்காற்
பாறின நின்மான் மியவரு ளமுதே பாணிக்கின் றேனையிப் பவத்தே
தொன்மைவீ டளித்தாள் கென்றுவேண் டினரித் தூய்மைமுன் னிலைமையுந் துலக்குந்
தொழத்தகு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௬௨)

சங்கரர் கைலைக் கேதுங்காற் றுணையிற் றத்தாத்தி ரேயர்யோ கத்தாற்
றருமறி வின்ப லிங்கமெய் யினைச்சி தம்பர குஞ்சித பதஞ்சேர்த்
தங்கரு ளினராங் கயிலைசென் றதுதன் பாவருத் தாபத்தி விளக்க
மவ்வுடல் கயிலை சென்றது சமாதிக் கவனியி லிடமிலை யென்றே
யிங்கிதற் புதமே யனையசங் கரர்பின் னென்மன மிந்துசே கரனல்
லெழிலியை யெழிலிக் கந்தர நாத னிமாசலை பதியிணை யடிக்கீழ்த்
துங்கவின் புற்றெஞ் ஞான்றும்வாழ் கென்று துதித்துத்தந் நிலைவிளக் கினராற்
றொழத்தகு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௬௩)

ஒருவர்வண் கயிலை சென்றன ரென்வே றொருவர்கா ஞ்சியினிற்கா மாட்சி
யுயர்தளிக் குள்ளவ் வுடல்புதைப் புற்றுங் குபசரிப் புறுகின்ற தென்றே
ரிருவரு முயர்வே சொலவந்தா ருண்மை யேற்பிற மூதிங்கன் பிறரு
மிஃபுகழ் சொலவந் துரைதடு மாறி யின்னன பொய்யெனத் தெளித்தா
ருரைசெய்சங் கரர்பின் பற்கணுஞ் சிவன்சீ ருரைப்பதே தாலுமற் றவற்காண்
புறுவவே கண்கள் பூசனைத் திருத்தொண் டுஞற்றுவ கரங்களெஞ் ஞான்றுந்
துரிசற நினைப்போன் முத்தனே யென்று துதிக்குமா றருண்மது ரேச
தொழத்தகு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௬௪)

* ஆதி என்றதால் துர்பாக்கியம், துக்கம் துர்வர்த்தைகளுங்கொள்க. இவைஅச்சலோகத்துள்ளன.

பொய்யெலாந் தந்து புனைந்தவிச் சரிதர் புகலுமிச் சங்கர சரிதம்
புகல்பவர் கேட்போர் பயனிவை யெனலே போதுமெவ் வெவர்க்குமீ தொக்கு
மையமுன் றாமே கொண்டுகம் புகர்வே றடுத்துரைஇப் பின்பய னறைந்தா
ரதனைநோக் குரவோ ருண்மைதேர் குவர்மே லறைவதென் னின்னினி யமைக
வுய்யுகன் னெறிசா ரனையசங் கரர்பி னுமாபதே யதிமிரு தளரி
னெண்பத மென்னெஞ் சதிகடி னம்மென் றுன்னலை பன்மலை யுறையுந்
துய்யநின் பழக்க மேயென துளத்துந் துலங்கவீற் றிருந்தரு ளென்றூர்
தொழத்தகு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௩௫)

விழுந்தவ ரெழுந்துய்ந் திடவிடா தழுத்து வெய்யபாழ்ங் கிடங்கெனப் பெரியோர்
விளம்பகம் பிரமத் தழுந்துசங் கரர்நின் விரைமலர்த் தாட்டுணை பற்றி
யெழுங்தென துளமா மதகரி யினையீர்த் தின்னரு ளங்குசத் துன்றூ
ளென்னுமா ளானத் தன்பெனு நிகளத் தின்சிவ ஞானயந் திரஞ்சேர்த்
தழுந்துருள் பொழுது மசைவற யாத்த வன்பர மெனத்துதித் துய்ந்தா
ருதுமுனம் புரிந்த பெருந்தவப் பயனே யுறுகனீத் தருள்வதுன் றொழிலே
றெழுந்தவம் புரியே னுயினு மெளியேன் றுரிசறுத் தருளனின் கடனே
தொழத்தகு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௩௬)

பரமவென் மனமா மதப்பெருங் களிறு பவஞ்சச்சூ ழலிலுலாய் விடயப்
பாழுண நிறைத்துக் களித்துமேன் மேற்செய் பவமற நயத்திறு லன்பென்
றுரைகயிற் றூர்த்துன் னிலைப்பதத் தசையா துறைந்திட வருள்கென வுரைத்தே
யுய்ந்திட வளித்தாய் சங்கரர்க் கெந்தா யுரனிலாச் சிறியனென் செய்கோ
சரணநின் சரணே யொழிவிலாப் பவஞ்சச் சார்புமுற் றொழியவே காந்தச்
சார்புரீஇச் சுத்தாத் துவிதசித் தாந்த சைவமே மெய்யென விளங்குந்
தருவமெய்ஞ் ஞானத்தெளிவுபெற் றுய்வான் றொண்டனேற் கருளுநா ளெனதோ
தொழத்தகு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௩௭)

சங்கரி நாத வனைத்தணி சரளஞ் சாதுவாம் விருத்தஞ்சு வருணந்
தக்கவர் புகழ்ச்சி சரசமே விநயஞ் சலட்சிய லட்சண திகள்சார்
மங்களை யாமென் செய்யுட்கன் னிகையை மணந்துகொண் டருளுக வென்று
வழுத்துசங் கரருக் களித்தவள் ளாலுன் மலரடிப் பூசனை யாதி
யிங்குறு புகழ்க்கன் றுதரமோம் புதற்கன் றேனைய குறித்துமன் றிருண்முற்
றிரித்தரு ணிறைத்துத் திருவடி ஞான மிலக்கியெற் புரத்தற்கே யிதழித்
தொங்கல்வே ணியநா டொறும்புரி கின்றேன் றொழும்பனேன் கருதியாங் கருளாய்
தொழத்தகு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (௩௮)

கருணைவா ரிதியே நின்னடி முடிகள் காண்புறக் கருதிமா லயன்முற்
சருவிலங் கெகினாய் வான்புவி யுழன்றுங் காண்பெறா யென்முனெவ் விதநீ
தெரிதரு கிற்றி யென்றசங் கரன் றிருத்துதி யுரைத்திடச் செயுமா
தேவனே நாயேன் றீயனே யெனினுந் திருவருட் பூர்த்திபெற் றெவரும்
பரவுசன் மார்க்க நிலையனாய்ப் பவஞ்சப் பற்றறமுற் றகன்றொளிர் பெரியர்
பாததூளிகளென் றலைக்கொடு நாளும் பாங்கினிற் பணிதொழில் பூண்டேன்
றரியனே கடந்த சோதியே வாதை தொலைத்தெனைப் புரத்தனின் கடனே
தொழத்தகு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே (௯௯)

சாம்பநின் றொண்ட ராம்விரிஞ் சாதி தருசுரர் பிறர்களாற் றுதிக்கத்
தக்கவர் தமையென் னும்பொழு தினையே தலைவனென் றறிகின்றார் பிறர்க்குந்
தாம்புகல் கின்றார் முத்தொழி லாற்ற றனிலுனைத் தானியம் பிறரைச்
சார்பத ராக வுணர்கின்றா ரென்று சங்கரர் துதிக்கவா ரருள்செய்
பாம்பணி பரம நாம்பர மெனுமாற் பட்டழ லாதெனக் களித்த
படிமுழு தோம்ப லன்பர மெனினும் பகர்ந்தனன் விரைந்தரு ளுதற்கே [வாய்
தோம்புகன் றதுவென் றுளங்கொளா தெந்தாய் தொண்டனேன் வேட்கைமுற் றருள்
தொழத்தகு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசேகரனே (௧௦௦)

இருவினை யொப்பு மலபரி பாகத் தியைபின்மேற் சத்திநி பாத
ரெய்துவர் துவாத சாந்தத்தெம் முடனா யிரண்டறக் கலந்துவா ழின்ப
மருவிலர் பிறரென் றிரங்குதன் கருணை வயத்தனா யப்பெயர் வாய்மை
வயக்குமா மதுரா புரியரு ளுருவம் வகித்துவீற் றிருந்தருள் கின்றாய்
பருவமின் றெனக்கென் றொதுக்கினின் னருட்கும் பழுதுசொற் றிடவருங் கொல்லோ
பாவியே னுலென் றினைவதென் னுள்ளம் பசுபதே யுமாபதே பரம
துரிதமுற் றகற்றி யெனைப்புரந் தருள்க சோதியே நீதியே துலக்குஞ்
தொழத்தகு கயற்கண் வாமவண் சோம சுந்தரா சந்த்ரசே கரனே (௧௦௧)

சோமசுந்தரமாலை முற்றுப்பெற்றது.



## சில கவிகளின் பொருள்விளக்கம்.

(௩௭)வது செய்யுள். இதனில் அறிஞர்க்கும், தேவர்க்குஞ் சிலேடை கூறுகின்றார். புதர்—அறிஞர், தேவர். சோமன்—உமாசகிதன், சந்திரன். துலக்குகின்றார் என்னும்பயனில்லையை, அறிஞராகிய வினைமுதற்குக்கொள்ளுங்காற், கற்பகம், மணி தேனு ஆனந்தாமுதங்களை உமாசகிதனுக்கு விசேடணங்களாக்குக.

(௩௮) சிவசந்திர சிலேடை. பூர்வஞ்செய்த அசலம்போலு மிக்கபுண்ணிய நெறியிற் றோன்றும் நித்திய சரீரி, பக்தகணசேவிதன், மான்கரன், வியாபகன், மலவிருளை நீக்குமிஷ்டனாகிய உமாசகிதன் எனவும், பூர்வதிசையிலுள்ள தருமமிக்க மலைவழியிற் றோன்றும் அமுதமயசரீரி, மங்களகரன் உடுகண சேவிதன், மான்களங்கி, ஒளியினன், கலைகளால்நிறைந்தவன், இருள்நீக்கு மிஷ்டனாகிய சந்திரன் எனவுங்கொள்க. சுமனர்—அறிஞர், தேவர்.

(௩௯) சிவராச சிலேடை. ராசசேகரன்—சந்திரசேகரன், அரசர்தலைவன். கைவலியமுதல்வன்—மோக்ஷநாதன், ஒரேதலைவன். நாற்பததருமம்—பூரணதருமம், நாலுகாலுடனடக்குந் தருமம்.

(௪௨) மனதுர்க்க ரூபகம். துர்க்காதிப்பிரியன்—துர்க்காதேவியிடத்தும், பர்வததுர்க்கங்களிலும், அதிப்பிரியன். துர்க்கம், பிறர்க்கரிய பர்வதப்பிரதேசம். பலம்—சைனியம், பலம்.

(௪௪) சிவ சிங்க ரூபகம். ஒலிக்குமானைக்கைக் கொள்ளுதலும், அந்தகாசுரயானையாசைப் பங்கஞ்செய்தலும், வியாக்கிராசுர நாசஞ்செய்தலும், யாவுஞ்சங்கரித்தலும், கிரியிலிருத்தலும், பஞ்சானன வெண்மேனியுமுள்ள சிவகண்டீரவமென்க.

(௪௫) சிவபாத பஞ்சர ரூபகம். ககசிகாமணி—பக்ஷிசிரேஷ்டம். அது அண்மை விளி. துவிசம்— இருபிறப்பு. இதனைத் துவிசர்க்கும் பக்ஷிகளுக்குங் கொள்க. கக்ஷசிருத பஞ்சரமென்றியையும். ஆசிருதம் ஆசிரயிக்கப்படுதல்.

(௪௬) சிவபாத உப்பரிகாரூபகம். கிரிசாநாதாங்கிரி—உமாநாயகபாதம். அங்கங்களிலுள்ள வெண்மையுஞ் செம்மையும் வெண்சுதை செம்மணியென்க. அமிசபதம்—பரமாமிசராய பெரியரையும் அன்னபக்ஷிகளையுமுணர்த்தும். குளிகை—உப்பரிகை.

(௫௦) சிவ அர்ச்சுன சிலேடை. சந்திகாலம்—சாயங்காலம். அப்போது மருதுமலரும் பூசாகாலமாதலாற் சிவன் அன்பருக்குப் பிரகாசிப்பன். சுருதி (காது) சிரங்களில் மருதம் பூத்தரிக்கப்படும். லோகமாதா வென்று

தன்மையார்ந்த பிரமராம்பிகை அபிராமம் (அழகு) நோக்கிப் பிரேமித்தலுற்றுச், சத்துக்களின்பாவனையால் விளக்கஞ்சார்ந்து, ஆதிசேடாபரணியாய்ச்சகலதேவர்களாலும் பூசிக்கப்பெற்றுச் சிவையினாற் றழுவப்பெறுதலை வாய்ந்து, ஸ்ரீசைலத்திலுள்ள மல்லிகார்ச்சுனலிங்க நாமம்பெற்ற சிவனெனவும், தாவுதலைச்செய்து, மைநிறமார்ந்து, பிரியத்துடன்சூழுகின்ற பிரமரங்களின் அழகும், நல்லவாசனையுஞ்சார்ந்து, போகமிக்கார்க்கு அலங்காரமாய்ப் புஷ்பங்களாற் பாராட்டத்தக்கதாய் மங்களகரமாய் மல்லிகைக் கொடிகள் சூழப்பெற்ற மருதமரமெனவுங் கொள்க.

(௫௧) சிவபிரமர சிலேடை. பிருங்கியாதியரின்புறநடித்து, அசுரனாகியகரியின் கெர்வத்தை அபகரித்து, விண்டுவினிடத்துப் பிரியமுற்று, நாததத்துவஞ்சார்ந்து, மகத்தாகிய வெள்ளிய ரூபியாய்ப், பயத்தால் மன்மதனால் ஆதரிக்கப்பெற்றுத், தேவகூட்டத்தின் நல்லஅன்புபெற்று, ஸ்ரீசைலவாசியாய், வியாபகியாய்ப், பிரமராம்பிகாதிபனான சிவனெனவும், பெண்வண்டுகளுவப்பச் சரித்துக்' கரிமதசலம் பானித்து, வசந்தகால விருப்புற்று, மகா அசிதவுருத்தாங்கி மதன் விருப்பத்துக்கிடமாய், மலர் வனங்களிலுற்று, நல்லஇறகு பொருந்திப், பர்வதாதிகளைச்சார்ந்து எங்குந் திரிகின்ற ஆண்வண்டு எனவுங்கொள்க. மாதவம்—வசந்தகாலம். அசிதம்—கருமை.

(௫௨) சிவமேக ரூபகம். கருணாமுதம் பெய்து; மிக்கதுன்ப வெப்பநீக்கி, ஞானப்பயிர் பலித்தற்கு விரும்பும் அறிஞர் வேண்டல்பெற்று; இச்சாமாத்திர சரீரியாய், அன்பராய மயில்கள் களிப்பப் பருவதவாசியாய்ச், செய்ய சடாமண்டலத்தையுடைய நீலகண்ட சம்புவாகிய கந்தரமெனவும், சுகோற்பன்னகருணைபோலுநீர்பெய்து, துக்கந்தரும்கோடையை நீக்கிப், பயிர்கள்பலித்தற்குவிரும்புந்தேவர்வேண்டல்பெற்று, யாரும் விருப்பத்தக்க ரூபியாய், மயில்கள்களிப்ப மலையைஅடுத்துச், சலிக்கின்ற பின்னலாகிய மின்னலைக் கொண்டகரிய மேக மெனவுங்கொள்க.

(௫௩) சிவ மயூர ரூபகம். வியோமசிகையன், பணிசிரேட்டாபரணி அன்பர்க்குபதேசிக்கின்ற பிரணவ கானத்தையுடையான், மேகதேகியாகிய பார்ப்பதியைக்கண்டுகளிப்பால்நடித்து, வேதாந்தஉத்தியானத்திலுலாவும் நீலகண்டனாகியமயிலைத்தியானிக்கின்ற நான், எந்தஇடக்குக்கும் அஞ்சேனெனவும், மேல்நோக்கும் உச்சிக்கொண்டையையுடையதும், பணிசிரேஷ்ட சேவிதகலாபியும், கேகிகானமுள்ளதும், வெற்பிலெழுகின்ற மேகங்கண்டு நடித்து உத்தியானங்களிலுலாவுவதுமாகியகழுத்தில் நீலநிறமுள்ள மயிலைத் தியானிக்கின்றயான் எந்த விஷங்களுக்கும் அஞ்சேனெனவுங் கொள்க.

(௫௪) இதுவுமது. சஞ்சலை—மின்னல்.

உ

கணபதிதுணை.

# வேதவனேச ஸ்தவம்.

## காப்பு.

மணியண் ணைச்சார் ஸீரகத்தி மடியப் பச்சி மாபிமுகத்
தணிவந் துலைத்த காறூக்கி யாங்கே யவணின் றருள்காட்சி
கணியன் பருக்கோ ரிடருறினக் கணந்தீர்த் தருள்வோ மெனுங்குறிப்பென்
றெணிநிற் பணிந்தேன் வேதவனத் தெந்தா யிபமா முகமணியே. (௧)

திருவாழ் வடியார்க் கருளண்டன் சிவப்பி ரேம பிண்டனசை
தருநீள் சுண்ட னன்பளிக டதைந்துண் ணருளா மதகண்ட*
னிருளார் விபத்துத் தெறுசண்ட னேக தந்த தண்டனுல
கருண்மா சவுண்டன்† வக்ரதுண்ட னுய கணேசற் பணிகின்றேன். (௨)

## நூல்.

பரம னாதி யந்தமிலான் பவஞ்ச முதல்வ னித்தியனே
தூரியன் ஞான மயனேகன் றுருவு மயன்மாற் கமேயனொளி
பெரியன் மனம்வாக் கதீதனெனப் பேணித் தொழுசங் கார்க்கருளும்
வரமன் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசகம. (௧)

தனது சத்தி யாதிசத்தி யந்தர் சனத்தன் சருவாங்க
மனதைக் கவர்மா மணிப்பணியன் வருநீர்த் துளிசம் மியாகசடி
யனக பரைமித் திரனையா னனனென் றேத்து மவர்க்கருளும்
வனிதை யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசகம. (௨)

ஈசா னாதி யைம்பிரம விருத யாதி சடங்கசக
தேசா ருவம னிலிமுப்பா னாறு தத்து வாதீத
நேசார் பெரிய நிலையெவரோர் நிலைய னென்றார்க் கருளாசை
வாசா யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசகம. (௩)

ஒருபாற் பவளக் குலவொளிமற் றொருபா னீல வொளிதிகழ்ந்தே
யிருவே றாகா தொன்றியுபர்ந் தேக மாய்வேள் வலிதெறுஞ்சீ
ரருள்சார் நிபமாந் திருவருவெ னகத்தி னமர்கென் பார்க்களித்த
மருமாண் யாழைப் பழித்த மொழி மணாள வேத வனேசகம. (௪)

அரமா தேவ தேவேச யமாரி புராரி மாராரிசிவ
வரதே வாதி தேவவென மாபின் வழுத்து மெனக் கருள்க
கருணா சீல வெனத்தொழுவார் கவற்சி கடிந்தாள் கறைக்கண்ட
வருமாண் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசகம. (௫)

சென்று வணங்குஞ் சுராசுரர்தஞ் சிரமந் தார தாமநிறைந்
தொன்று பவாம்பு திப்புணையா யுமைபா விமலா முன்மலர்த்தா
ளென்றும் பணிகின் றேன்சம்போ வென்பார்க் கின்பே யருள்கனக
மன்ற யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசகம. (௬)

* கண்டம்—கபோலம். † சவுண்டன்—சமர்த்தன்.

வேத மூல விருபாக்க விசுவா திகனே விசுவேச
போத சிவமுக் கண்ணபிழை பொறுத்தேன் றருளத் திருவுளங்கொண்
டோது கடைக்க ணோக்கியெனை யோம்பு கெனவேண் டினர்க்கருளு
மாதர் யாழைப் பழித்த மொழி மணாள.வேத வனேசநம. (எ)

அடிசார்ந் தவர்ப்போற் றுற்றனிற்கே யலதின் றேழை யானிஃதோர்ந்
தடியே னிடர்தீர்த் தருள்கமறுத் தாயே னீயே வற்சலன்சா
ரடியார்க் கெனன்மெய் யாங்கொலரு ளண்ணு லெனுமன் பருக்கருளும்
வடிவார் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (அ)

பீதி கார்வெஞ் சொலர்கொடியர் பேதை யேன்பால் வெம்மறலி
தூத ரணுகிற் றுணையினதாட் டுணையே சலியா தென்னுளத்துன்
பாத நிலைப்ப வருள்கெனநிற் பணிந்தார்க் கருளும் பரமசிவ
மாதர் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (கூ)

செயலற் றயர்ந்து கிடந்துமலா திகள்வார்ந் துறுப்போய்ந் தறிவிழந்து
மயன்மிக் குறுங்காற் கங்கைமதி மலர்பொன் வேணி வடிவுளத்தி
னயமிக் குறக்கண் டுயவருளென் றோதவெனவேண் டினர்க்கருளும்
வயமன் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (க0)

கால னூர்திக் களமணியென் காதி லுறுங்காற் சாம்பநீ
வால விடையி லெழுந்தருளி வந்து மகனே யஞ்ச லெனச்.
சால வாசைப் படுகின்றேன் றமியே னெனப்போற் றினர்க்கருளு
மாவில் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (கக)

தார மகவா திகளென்பாற் சார்ந்து ரோதித் துமக்கெனு
ரார வேண்ட லென்னையெனு மவதி யிறைநின் சிவாயநம
நேர வுரைத்த லேயருள்க நிமல வென்றூர்க் கருள்கருணை
வாரி யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (கஉ)

என்னை நோக்கு தெரிவிலையா யெம்மை யறிகின் றிலரிவர்க்குத்
துன்னு மைய காலமெனச் சூள்வார் சொலுங்காற் றூநீறு
மின்னு நின்மா மேனியுள மேவ வருளென் றூர்க்களிக்கு
மன்னு யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (கங)

ஈச நாயே னிவ்வுடனின் றியாத ஞேதே கம்புகுங்கா
லாசின் மயக்க முற்றினையா தண்ணு னினதம் பாவிந்து
தேசி னுருவென் னுளங்கொளுமத் திறமே யருள்கென் றூர்க்களிக்கு
மாசில் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (கச)

நிழனீ ரிலைப்பா றிடமிலதாய் நெடிதாய்ச் சனமில் யமலோக
வழிசெல் காலை யந்நெறியை மாற்றி மனசுக் கின்னெறியே
விழுமி தருளாய் சாம்பசிவ விடைமேல் வருவா யெனவருளு
மழலை யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (கரு)

எங்காட் கோர மௌரஞ்செல் வேனே வங்காட் பாதீனன்
மன்னு தரவு வேறில்லேன் வருத்து மனைய வெங் கிரயங்
துன்னு தருள்வாய் சுகப்பிரத தூரிய வெனுமன் பருக்கருளு
மன்னேர் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசனம. (கசு)

அலங்க ணாணை* யுமைநாத வடிமை யிடைக்கண் ணேட்டமே
துலங்கப் புரிந்து தென்றிசைக்கோன் றுயர்தீர்த் தருடி பிறரனைய
நலஞ்செய் வாரின் றவர்துணையா நயவே யென்னுவேண் டியவருளும்
வலங்கொள் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசனம. (கஎ)

தீய மரணம் வரும்வருமென் சிந்தா குலபீ டிதனுனே
னேய வகதி யர்க்கருள்வோ னீயே நீல கண்டவெனக்
கேய மரண பயந்தீர்த்தாள் கெந்தா யென்பார்க் கினிதருளும்
வாய யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசனம. (கஅ)

வரம்பின் றிளையர் முதியர்முதல் வாழ்வா ருயிர்முற் றுங்கொளுங்கூற்
றரங்கை தினைந்து வெருவுமெனை நின் னருளா லதுதீர்த் தருள்கென்றே
யிரந்து தொழுவா ருயவருள்செ யிமாசலேச பாரதிகை
வரங்கொள் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசனம. (ககூ)

வேறு கதியின் றன்பரிடர் வீட்டு தொழிலோய் பிறப்பிறப்பி
னேறு துயருற் றுற்றுமே யினைகின் றேனை யெடுத்தருளாய்
நீறு பரவுந் திருமேனி மிளிர்செஞ் சடையா யெனவருளு
மாறில் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசனம. (உ0)

உண்மை தெளித்துப் பிறப்பிறப்பை யொழித்து மோக்க வாழ்வுதருந்
திண்மை யெழுத்தைந் தென்மனநாத் திகழா மருவா தென்செய்கேன்
றண்மை யருளா னறத்திறலீ தந்தா ளெந்தா யெனவருளும்
வண்மை யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசனம. (உக)

நாத கௌரி நாதசெகந் நாத சரண்சார்ந் தார்கிரங்கு
நாத துயர்தீர்த் தின்பளிக்கு நாத வொளிமுற் றிலக்குருவ
மாத குறவ† நினையென்றும் வணங்கு கின்றே னெனவருளு
மாதர் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசனம. (உஉ)

உன்னை யடுத்தும் பூசாதி யுஞற்ற வணரே னான்முறைமுன்
றன்னை யடைமார்க் கண்டருக்காச் சமனை யுதைத்த திருவடியே
யென்னை யளிக்கு மெனத்துணிந்தே யிறுகப் பிடித்தே னெனவருளும்
வன்ன யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசனம. (உங)

தாந்தா தாதை சுதத்துரோ கருக்கே யருடி கயிலேச
வேந்தால் யானே துரோகமவை யியற்றற் கசத்த னெவனருள்வாய்
தேந்தா ரிதழி வேணியனே தெரியேன் சிறியே னெனவருள
வார்ந்தார் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசனம. (உச)

---

*. அலங்கனம் ஆணை! எனப்பிரிக்க. † மா தகு உறவ எனப்பிரிக்குக.

தலையகூர் சில சாம்பவிதே தான கால நானேயவ்
வியல்பாத் திரநீ யேதாதா வேத்தி லேன்மற் றவர்பால்யா
னுயுமா நின்பான் மெய்யன்பே யுறுவா னருள்கென் றூர்க்களிக்கும்
வயமார் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௨௫)

எனைநீ பசுவென் றூற்பசுவூ ரிறைநீ களங்கி யெனிற்சிரமேல்
வனைவா யொருநா வின்றெனினீ வனைபாப் பிருநா வினநினைச்சார்ந்
தனயா வவைமுற் றுய்ந்தனவேன் றருளா யிருணீத் தெனவருளும்
வனமார் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௨௬)

சயநோய் தலைகண் மார்பிரமே கந்நோய் மூலஞ் சுரம்விக்குண்
மயலார் விடம்வார்த் திகஞ்சூலை மலநோய் தெறுமா வைத்தியனீ
யுயர்நீற் றவிழ்த முதவியவை யொழித்தாள் கெனுமன் பருக்கருளும்
வயமார் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௨௭)

என்னை யடர்துன் போபலநா னேழை யாற்று தினையின்றே
னன்னை நீயே சகலான்ம வந்த ரான்மா வடிநாயே
னின்ன லறியா யலையருளா யெந்தாய் நந்தா தெனவருளும்
வன்ன யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௨௮)

யாவ னிடத்தோர் கணமெனுநின் னினிய கடாட்ச முறுமவன்பான்
மாவும் பூவு மருடாதி வளர்தா னியாதி பொருள் வடிவாய்
மேவு கின்று ரெனிலுனருள் விளக்கம் விரிப்பா ரெவர்விமல
மாவண் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௨௯)

அன்னை பிதாவாம் பவானிபவ னகமுன் னொளிக்கு மிருடானி
தூன்னு மிருடன் சிலைசிவன்முச் சுடர்கூர் நயனி திரிநயன
னென்னு மிவரம் புயமலர்த்தா ளிறைஞ்சு கின்றே னெனவருளு
மன்னும் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௩0)

கலைசே கரன்கா தலிசமலக் கண்ணி யனைநீ யென்பவநோய்
தொலைவா னேக்கிப் பவக்கடலிற் றுளைந்தாழ்ந் தின்ன லுறுமெனைநன்
னலமார் கரைசேர்த் தருள்கென்று நமக்கு மன்பர்க் கருள் புரியும்
வலமார் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௩௧)

பால நயன காந்தியிடப் பாலொண் டொடிவெம் பணிப்பணிகள்
வால மதிச்சே கரமுதல மருவார் தரும்பே றலம்வேண்டா
நீல களத்த சாம்பசிவ நிமல வெனவேண் டினர்க்கருளு
மாலில் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௩௨)

யாவு நீயா தலினீநா னென்ப தறவு பகைநொதுமன்
மேவும் விகற்ப வுணர்வேதவ் விதத்தி லுறுமா மயலேது
பாவை பாக வவ்வுணர்வே பலிப்ப வருளென் பார்க்களித்த
மாவண் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௩௩)

யாவ னிடைத்தோன் றிடுநிலைக்கு மிலய மாகு மிப்பவஞ்ச
மேவு மனைப பிறப்பிறப்பில் விமல சிவபா வனைவலியே
யோவில் சிவமே நாமாம்பே றுதவு மென்பா ருயவருளு
மாவன் யாழைப் பழித்தமொழி மனுள வேத வனேசரம. (௩௪)

தேச மீந்தி யம்பராணன் செருக்கே யகந்தை யாதிதொலைந்
தேக வழுக்கற் றிடிறுயே னிலங்கு சிவமா கின்றேனப்
பாக முறுமா வருள்கென்று பாவித் தொழுவார் பயன்பெறச்செய்
வாக யாழைப் பழித்தமொழி மனுள வேத வனேசரம. (௩௫)

சிரத்திற் தனற்கண் கபாலகரந் திகழும் விடஞ்சார் களம்பணிப்பூட்
பொருத்த மெவன்பா விலையவனைப் புகன்மாதேவ தல்லியனு
வுரைத்தி லேன்மற் றுன்னேனென் றுனைப்போற் றினரின் புறவருளும்
வரத்த யாழைப் பழித்தமொழி மனுள வேத வனேசரம. (௩௬)

களத்ர வாமன் கறைக்களன்கைக் கபாலி நுதற்கண் கலைச்சிரனுக்
கினத்த வெவனி னிலார்பிறரக் கிழவ னலதோர் தேவுளதா
வுளத்து நினையே னினையேனென் றுன்றுள் பணிவார்க் கருள்வாணி
வளத்த யாழைப் பழித்தமொழி மனுள வேத வனேசரம. (௩௭)

காம ருடலஞ் சுகவாக்குக் கவின்கூர் மனைசெய் மேருநிக
ரேம முதலெல் லாமிருந்து மென்னே நின்னே ரன்பிலையேற்
றேமி லன்பே யருள்கென்று துணைத்தா டொழுவார்க் கினிதருளு
மாமை யாழைப் பழித்தமொழி மனுள வேத வனேசரம. (௩௮)

உன்னின் வேறோர் தேவுளதென் றுணரே னெல்லா முன்னுடைமை
யின்ன முறையா னீநானு மினிய சிவோகம் பாவனையே
கன்ன ருண்மா தேவவென நவிலும் பெரியர்க் கருள்பரம
வன்ன யாழைப் பழித்தமொழி மனுள வேத வனேசரம. (௩௯)

நினதாம் பெருமை யென்னெளிமை நினைத்துன் னருளுக் காலடிய
னெனையோம் புகநிற் றுதிக்குமுரா னில்லேன் றுதித்த வித்தரிசன்
புனிதீ பொறுத்தி பிரபுவென வுரைசங் கரருக் கருள்பரம
வனமார் யாழைப் பழித்தமொழி மனுள வேத வனேசரம. (௪௰)

அருத்தி மிகப்பல் புயங்கமணி யனக வினைய சிவபுயங்க
விருத்த துதிகொண் டிதைத்துதிப்பார் மேவ வரோகந் தீர்க்காயு
ளருத்த மனைநன் மகவாதி யருள்க வெனுஞ்சங் கரர்க்களித்த
வரத்தன் யாழைப் பழித்தமொழி மனுள வேத வனேசரம. (௪௧)

இன்ன துதியன் பாலம்பி கேச யாவ ரினிதுரைப்பா
ரன்னர் மரணத் தெப்பயமு மடையா திதயாம் புயமலரி
னின்னை யேகண் டேயவருளாய் நிமல வெனுஞ்சங் கரர்க்களித்த
வன்ன யாழைப் பழித்தமொழி மனுள வேத வனேசரம. (௪௨)

அயன்முனைவர் பரிக்கும்பே ரானந் தாத னத்திருக்குஞ்
சயவில் பாணம் பாசாங்கு சஞ்சார் பாணி சிவாத்துவித
வியல சிலையின் மேனியொளி யெமையோம் புகவென் றூர்க்கருளும்
வயமன் யாழைப் பழித்தமொழி மஞ்ஞை வேத வனேசமே. ௪௩)

சிரமே பக்கம் வால் வடிவாய்த் திகழன் னுதி யைகோசம்
விரவாச் சூழு மகானந்த வியன்பீ டத்தி னமர்ந்ததிரி
புரையி சனமா தேவியைமுப் போதுந் துதிப்ப லெனவருளும்
வரமார் யாழைப் பழித்தமொழி மஞ்ஞை வேத வனேசமே. (௪௪)

பிரமா திகளா லைந்தொழினீ பிறக்க விளையா டியுஞ்சிறிதுஞ்
சிரமா திகளில் சுதந்தரிமா தேவி பிரமா னுதிகடந்
தருள்கூர் தருநின் பரானந்த மடைப்பான் றுதிப்ப லெனவருளும்
வரமார் யாழைப் பழித்தமொழி மஞ்ஞை வேத வனேசமே. (௪௫)

சீவர் சிவனோர் சிற்சாதி சிவனை யவருய்ந் திடக்கொளுருச்
சீவ னெனுமா கொடுத்தனைய சீவர்சிவ னுதி யபுரியுந்
தாவி லருள்கூர் பவானியுன சரணே சரணென் றூர்க்கருளு
மாவண் யாழைப் பழித்தமொழி மஞ்ஞை வேத வனேசமே. (௪௬)

சிவர்பக் குவர்மூ வாதாரஞ் சிறுக்கச் சுருக்கிப் பிராணனையே
னிலவ வேற்றி மனம்புருவ நிறுத்தி நிவிர்த்த ராய்ச்சிவப்பே
றிலச வருசச் சிதானந்த மெய்து வாரென் றூர்க்கருளும்
வலமன் யாழைப் பழித்தமொழி மஞ்ஞை வேத வனேசமே. (௪௭)

மலிதூன் புடவிற் றெருட்பசையா மசாரில் வெருட்சி தருமனையிற்
சலன நிதியி லுட்சுழித்தோர் தமின் றுலைவார் பலரம்ம
மலர்நின் னருளேக் கிலார்க்கம்மே வருமோ வறிவென் றூர்க்கருளும்
வலமன் யாழைப் பழித்தமொழி மஞ்ஞை வேத வனேசமே. (௪௮)

உடலை நிதியை மகார் மனையை யுவர்த்தா சானன் மொழிபெற்ற
திடமெய்ஞ் ஞானி சமாதியினோர் திவணி ரதிச யானந்தச்
சுடர்நீ யம்மே யுண்மையெனத் துதிக்கு மன்பர்க் கருள்புரியு
மடனில் யாழைப் பழித்தமொழி மஞ்ஞை வேத வனேசமே. (௪௯)

நிகழ்ப் பவஞ்சஞ் சத்தியமித் தியாகு வியமே பிராகிருதச்
தகுபுத் தியின்சார் பெறும்பலர்வா ததாற் பயினின் னலையொழித்தன்
புகல்பெற் றயவன் னேயருணீ புரிவாய் புரிவா யெனவருள்சேர்
வசைய யாழைப் பழித்தமொழி மஞ்ஞை வேத வனேசமே. (௫௰)

விரவு நிவிர்த்தி பிரதிட்டை வித்யா சாந்தி யதீதையென
வுரைசெய் கலையைந் துன்பணிசெய் தறவீற் றிருந்த குளுஞ்சிவையே
யபரனி கபின்னை யாமுன்மையே யருளா யடியேற் கெனவருளும்
வரமன யாழைப் பழித்தமொழி மஞ்ஞை வேத வனேசமே. (௫௧)

அகாத பவஞ்ச பங்கத்தி லழுந்தி மனையா தியசுமைத்தின்
புகாது மோக பாசக்கட் டறவெமற் புரக்கும் வலியிலையே
மிகாம லிருணீத் தெனக்கருளாய் விமல நீயென் பார்க்கருளு
மகாஅ யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசகம. (௫௨.)

அன்னை சேசக் கரைநின்று ளாற்றித் திசணமிக கருணையாகா
நன்னர் மூலந் தொடுத்துச்சி நண்ணி நாதோ பாசனையே
யின்ன லறச்செய் தய்கின்ற றெனவேண் டினர்க்காங் கினிதருளும்
வன்ன யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசகம. (௫௩)

பின்ன மறயோ கினிராசி பீடத் துறைந்து மகாகால
முன்னு ருபே சனைச்சார்ந்து முந்து கணேசர் நாள்கோளா
லுன்னு சிருட்டி யாதிபுரி யுமையே யருளென் றூர்க்களிக்கு
மன்னு யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசகம. (௫௪)

உடுவின் மாலை வெள்ளுடைபூண் டீஇப்புத் தகங்கண் மணிவடங்கைக்
கொடுசெந் திரகோ டிகளொளியிற் குலவு சிவையை யொருமுறையுன்
னிடுவ ரேல்வாக் கிறையவரே யென்று தொழுமன் பருக்களிக்கும்
வடிவ யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசகம. (௫௫)

பானு கோடி யொளிமுகச்செம் பரப்பாற் சிவப்பாம் பல்லண்ட
மான வளித்தாய் தனுக்கணைபா சாங்கு சேசை நினைநினைப்போர்
மேன மதனு மோகமுற விளங்கு வாரென் பார்க்கருளு
மான யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசகம. (௫௬)

படர்செம் மணிதா டங்கமுகி பசும்பட் டுடையாய் செம்பொனொளி
சுடர்நின் னுருநோக் குநர்திருவைத் துலங்கச் சலியா திருந்திடத்தம்
புடைகொண் டெப்ப ரென்றுணருள் போற்றிப் பணிவா ருயவருளும்
வடிவ யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசகம. (௫௭)

அரச மனுசே கரபீச மாகிப் பரைபேர் விந்துளதாய்
வரபா வனமாய் சின்வதன மார்பு குய்யம் பேருளதென்
றுரைநின் சொரூபந் தியானிப்பா ருமைநீ யேயென் பார்க்களிக்கும்
வரமன் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசகம. (௫௮)

அன்னே சிலர்பல் லூழியுந்தன் பணுகார் விந்துத் திரையச்சார்
பின்னு மின்பத் தடங்கடலி லென்றுந் திளைத்துப் பவந்தொலைத்துத்
துன்னு நின்று மருடிபெனத் துதிக்கும் பெரியர் துணையாய
மன்னேர் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசகம. (௫௯)

கடைக்கண் ணிமைப்பா விறைமைபெறீஇக் கருணைக் கடலிற் றுளிபெற்றே
படைக்கு மயற்று தியர்ச்சார்ந்தோர் பவஞ்சக் கடனீந் துவரேனின்
னுடைச்செஞ் சரணுற் றூர்பெறும்பே றுரைத்த லெவனென் றூர்க்கருளும்
வடித்த யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசகம. (௬௦)

ஆசை யெனுமா விடக்கடலாழ்ந் தலையென் பானி பராமுனைகபே
லிகை நின்றுன் மலர்ப்புணைபெற் றினையும் பவவா ரிதிகடந்து
பேச வரும்பூ ரணவின்பம் பெறுத லெவனென் றூர்க்களிக்கு
மாசில் யாழைப் பழித்தமொழி மனோ வேத வனேசமே. (௬௧)

என்று வாயி லொருப்படுகேட் பிகல்போந் தாரசை விடேசியிறு
நின்று மலர்த்தா ணிழலின்பே துளைந்து வாழ்வே னுமைபம்மே
யென்று பணிந்தார்க் கின்பளித்த விமாச லேசை பவானிசிவை
மன்ற யாழைப் பழித்தமொழி மனோ வேத வனேசமே. (௬௨)

பிரமா தியர்பொன் முடியுரிஞ்சிப் பெரிதுஞ் சேப்புற் றொளியெழுந்தா
தாமா றொளிகட் கொளிநீயே தரும்வாய் காட்டு நின்னடிக்கே
பாமா நமக்கின் றேனுமைகண் பார்த்தாள் வாயென் பார்க்கருளும்
வாமார் யாழைப் பழித்தமொழி மனோ வேத வனேசமே. (௬௩)

குழலிற் பிறைவண் கொங்கையினுட் குலத்தார் தனுக்கை மலர்ப்பாணத்
தழல்வண் டருள்கண் ணுறத்திகழு முமையே யீச னிச்சையுரு
வழகி யகில காரணியென் னம்மே யென்பார்க் கருளமலை
மழலை யாழைப் பழித்தமொழி மனோ வேத வனேசமே. (௬௪)

விழிசெம் மேனி நாக்கழைவில் விழைநின் சரிதத் தென்செவிதே
னொழுகு கணைமூக் குடன்முடியிந் தொளிபெற் றின்ப முறுமாநின்
வழியென் மனஞ்சென் றுயவருளி மாச லேசை யெனவருளு
மழலை யாழைப் பழித்தமொழி மனோ வேத வனேசமே. (௬௫)

வினையிற் றீரை சிவதாரை வேத சாரை முலையாரை
யினிய தயைவா ரிதிபூரை யினைவெம் பவசா கரபாரை
கனிசொற் கீரை பவதூரை கௌரி நமவென் றூர்க்கருளும்
வனிதை யாழைப் பழித்தமொழி மனோ வேத வனேசமே. (௬௬)

வினையில் தீரை—சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியங்களில் தீரமுள்ளவள். சிவதாரை—சிவபத்தினி. முலைஆரை—தனங்களில் ஆரமுள்ளவள். பூரை—நிறைந்தவள். பாரை—கரையாயுள்ளவள். சொல்கீரை—சொல்லால்வென்ற கிளியையுடையவள். கீர்—கிளி. பவதூரை—பாவத்துக்குத் தூரித்தவள்.

பொலிதண் ணமுதாம் புதிசாரம் போதா னந்த நீரமளி
மலர்செந் நீப மணிதீப மணிசெய் சாலை பொன்சாலை
நிலைகொ ளுமைபா லெனதுமன நிலைத்து வாழ்கென் பார்க்கருளும்
வலிய யாழைப் பழித்தமொழி மனோ வேத வனேசமே. (௬௭)

சாரமும், நீரமும், நீபமும், தீபமும், சாலையும், சாலையுமாகிய நிலைமையைக்கொண்ட உமையென்க. நீரம்—நீர். நீபவனத்தில் ரத்தின தீபமாகி விளங்குகின்றவள் பொன்மதில் சூழ்ந்த மணிக்கோயிலையுடையவளென்க.

நடைக்க னுலோலை மணமாலை காமர் நீலை சுதாலீலை
யிடர்க்க டற்கோர் கூலதவ ரிதய சாலை செகற்பாலை

[illegible]

யடற்ப வஞ்சேந் திரசாலை யமர்கென் னுளத்தென் றார்க்கருளும்
வடித்த யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (௬௮)

லோலம்—சஞ்சரிப்பு. அன்பர்களுக்கு அருளச் சரித்தலால் சடைக்கண்ணின் சலன முள்ளவளென்க. அன்பர்க்கு அமுதம்போல இனியனவே அருளுதலை லீலையாச் செய்பவள். லீலை—பிரயாசையின்மையை யுணர்த்தும். பவஞ்சேந்திரசாலை பிரபஞ்சத்தை நானாவிதமாக இந்திரசாலம்போலச் செய்பவள். கூலம்—கடற்கரை. பாலை—புரப்பவள்.

உன்னு லாய வுலகமெலா முவற்றின் பயனீ யுறுகின்று
யன்னே கருத்தா போக்தாவா யமர்தி பரதந் திரனுயே
னென்னு விலையொன் றெனக்கருளா யிமையத் தாயென் பார்க்கருளு
மன்னோர் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (௬௯)

எனது நிலையுன் னிலையுணரா தேழை மோகத் தோர்சிறிதே
யுனது மகிமை பிதற்றினனீ யுவந்து கோடி மகாருழற
லெனகட் குவப்பே யாமன்றே வன்னு யெனுஞ்சங் கரார்க்கருளும்
வனிதை யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (௭௦)

சுருதி மறையென் பெயர்பூண்டேன் சொரூப மிலையின் மறைகாய்போற்
கருதி யுணர்வான் மறைத்துவைத்தே காட்டு மியல்பிற் றுதலினே
தருதி யருளென் றுன்பூசை சமைத்துக் கதவ மறைத்ததுசேர்
வருதிண் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (௭௧)

நின்னு லுரைக்கப் பெறுமறைக ணினைப்பூ சித்துத் திருக்கதவை
யன்னுட் பூட்டு மாணை கடப் பரிதா யென்று மயல்வழியிற்
சென்னீர் புரிந்தாய் செந்தமிழ்ச்சீர் திகழ்த்துங் கருத்தோ திகம்பரனே
மன்னே வாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (௭௨)

மனம்வாக் கதீத னெனுஞ்சுருதி மறுத்துக் கதவந் திறந்தருளென்
றெனையாள் வாகீ சம்மணிசொல் லினிய மொழியின் வசமாகி
யனமாண் கதவம் பாணித்தாங் கரிது திறப்பித் தாயென்னே
வனமார் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (௭௩)

நினையோர்ந் தடைத லுன்னருளா நிமலை யருள்பெற் றவர்க்கேயா
மெனும்வாய் தெளிக்குங் கருத்தோவா கீசர் பண்ணி னேர்மொழியென்
றினிதாய் முதலி லெடுத்துரைத்தா ரிதழி முடியெம் பெருமானே
வனமார் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (௭௪)

பண்ணி னேரென் முச்சொலின்பின் பயிலு மொழியா ளென்றமையா
லெண்ணு முலக மூன்றுதி யியன்முக் கரண மாதிகடந்
துண்ணெக் குருகு மன்பருக்கே யொளிர்வா ளுமையென் பதுகருத்தோ
வண்ண யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (௭௫)

பண்ணி னேரு மொழியுமையாள் பங்க ரெனமூ விருமொழியே
யெண்ணி யழைத்த னைக்கெழுத்தோ ரெழுத்தோ டிசைப்பார்க் கெளிவருநின்

ணண்ணன் மகிமை விளக்குதற்கோ வருள்வா கீச ரருளியது
வண்ண யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமே. (௭௬)

வீணை கான வி தூடணியை விழைபண் போலு மொழியென்றல்
வீணை மதனுற் பண்ணினுமேல் வியப்புற் றெழுசீர் மொழியெனலே
கோணைப் பொருளென் றறிஞர்கொளக் கூறு மாசுக் கருள்பெரும
மாணார் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமே. (௭௭)

அனைதண் ணருளே யத்தனைச்சார் வாக்கு மதற்கு மவளவனுக்
கினிய கூற வேண்டுமதற் கின்றி யமையா ததுமொழியே
யனைய மொழியு மிக்கினிதே லாகுமெனவா கீசர்புகல்
வனிதை யாழைப் பழித்தமொழி மணாளவேத வனேசமே. (௭௮)

யாவு மிருந்தாங் கறிதலினிற் கிடையீ டிலதங் கனமாக
நாவி னரசர் பண்ணினோர் நவில்பா வீரைந் தாந்துணையுந்
தேவ வவச மாய்க்கதவந் திறவா திருந்த தென்னேயோ
மாவண் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமே. (௭௯)

அயர்வி லுனையுந் தன்வயமாக்கரசின் பதிகத் தரும்பொருளி
னயமெத் தாத்தோ வனுபவித்த நாத நீயே யருளினவான்
மயர்செய் பவஞ்சத் துற்றுழலு மடமை யேனெவ் குணர்கிற்பேன்
வயமன் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமே. (௮0)

உனையே சிவ ரத்தினமென் றுறக்கொள் சுருதி யுனைமறைக்கும்
வினை மா சுலகர்க் கலதருள்சார் விமலர் பாலொண் ணுதெனுமெய்
தனைநா முணர வாகீசர் சார்ந்து திறப்பித் திலக்கினரோ
வனமார் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமே. (௮௧)

சருவ சிவ தயாநிதிநீ தாமெனன் றுரைப்ப சுருதிகளவ
வுரிய முதல்வ னுனையிரக்க மொன்றி லீரென் றுரைத்திடினப்
பெரியர் தாமித் துணைத்தென்று பேசற் கெளிதோ பிறைமுடியாய்
வரமன் யாழைப் பழித்தமொழி மணாளவேத வனேசமே. (௮௨)

ஒருவர் பூட்டு கதவினைவே றொருவர் திறப்ப தெனிலவரிற்
பெரியர்க் கலதி பிறர்க்கியலாப் பெற்றி போலம் மறைப்பூட்டைத்
தெரிய விளக்குந் தமிழ்வேதந் திறந்த ததன்சீர் பேசப்பெளிதோ
வரிய யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமே. (௮௩)

கண்ணிற் காண வுமைநோக்கிக் காணத் திறமி னெனுமிகையா
லுண்ணல் விழியான் மலக்கதவ முயிர்கள் காணத் திறந்தின்ப
நண்ண வருணின் செயல்விளக்கி நாவேந் தருளிற் றோர்ந்தடைந்தேன
வண்ண யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமே. (௮௪)

திருமுன் போந்த விருமணியிற் சேயாங் காழி மணியரசாந்
தெருள்செம் மணியைத் திருக்கதவந் திறப்பித் தருள்கென் றருளியதவ்

வருள்செ யரசை யப்பரென்றே யன்பு புரிவாய் மைச்செயலோ
வரமன் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௮௫)

அரசர் தமது சுருதிதிறந் நாங்குக் கதவ முறுமென்றே
கரையில் காழி மணியினையக் காப்பும் புரிகென் றருளியதோர்
பெரிய ரவர்சீர் சுருதியின்மேற் பிறங்கத் தெரிப்பர் பசுபதே
வரிய யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௮௬)

அதுல காழி மணியரசி னணை மேற்கொண் டென் றிருமுன்
சதுர மறையென் றுரைத்தளவே சடிதி திருக்காப் புறுத்தினைமுன்
முதுசொல் லரச ரிரக்கமிலீர் மொழிந்த துளங்கொண் டோசித
மதுர யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௮௭)

நான்கு வேத மெனுங்கருத்தே நயந்து சதுர மறையென்ற
தாங்கு விளியு மேவலும்போ லமைந்த தாலோ வக்கதவம்
பாங்கின் விரைய மறைத்தனையெம் பாம விசையின் விகற்பமெலாம்
வாங்கு யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௮௮)

சுருதி நின்வாக் காதலினீ சொற்ற தனையே சொலுஞ்சுகம்போ
லொருமை யன்பர் முழுதாற்ற லுன்போல் யாவுஞ் செயவலரத்
திருவர் மறைப்பூட் டகற்றலருஞ் செயலன் றென்றார் சேக்கிழார்
வரமன் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௮௯)

வாகீ சருக்கு வாய்மூர்க்கு வருகென் றருளி யிடைமறைந்து
சீகா ழியிற்சேய்க் கெதிர்நின்ற செயலெ னச்சே யவர்காழிக்
கேகா வருங்கா லிருந்தவப்பே றிதுவே யெனச்சென் றிறைஞ்சியதென்
வாகார் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௯௦)

காழி மணிவா கீசரிரு கண்க ளேயா மெமக்கெனநீ
யூழி னுணர்த்தாங் குன்கோயி லுயர்சந் நிதிவீ தியிலிருபான்
மாழை மணிக்கோ யிலினென்றும் வயங்க விருத்தி மகிழ்கின்றாய்
வாழி யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௯௧)

ஐய நினதோர் திரண்டுருவா யழைக்கப் போந்த சுந்தரரைப்
பொய்யர் பிரதி விம்பமெனிற் புகன்மோ பணிகள் புரிந்திடுமோ
செய்ய நினதா ரருளறியார் தெளிதற் கெளிதோ சிவசிவமெய்
மையில் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௯௨)

நிகம சாரத் தமிழ்பெறநீ நினைவேட் கையினுற் சுந்தரரை
மகளிர் நினைவுற் றனையென்று மாட்டிப் புவியுய்த் தனவேட்கை
திகழ வலிந்து பாடவித்த செம்மை யுணரார்க் கறைவதென்சீர்
வகைசெய் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசமம. (௯௩)

சடைய ரிசைஞா னியர்தவத்தாற் றருமூ வாண்டு மகவினவ
ரிடையுற் றெளிரப் புரிந்தம்மக வினுக்குன் பேரா ரூரனென
விடுவித் தருள்சுந் தரர்தமைமா னிடரி னினைப்பா ரென் படுவார்
மடனில் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (௯௪)

கயிலை தனிற்பார்ப் பதியுருவக் கவிஞ ரிருசத் திகளுலக
முயவந் தமையோ ராரவர்பாங் குறுதை விகமு மோராரவ்
வியலர் தமிற்சுந் தரர்பிறர்போன் றின்புற்றூரென் பார்பவமென்
மயலில் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (௯௫)

நினதா ரருளா னினைப்பெற்ற நேரி லன்பர் செயலெலா நின்
றனதே யெனலோர்த் திடவேசுந் தரர்பாற் புரிபல் செயலுநின
தெனவோ ராரே லிசைப்பதெவ னிந்து முடியா ரிதழியனே
வனமார் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (௯௬)

தூது நடப்ப வேவியது துரிசென் றேயர் கோனின்பாற்
காத லுறைப்பால் வெறுத்திடமேற் கடுநோய் புகுத்தி விளக்கினையவ்
வேது வுணர்ந்துஞ் சுந்தரர்க்கன் பெய்தார் பவத்தை யென்புகல்வோம்
மாதர் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (௯௭)

மோக மறுத்தார்க் கேதருவோ முத்தி யெனவா கமம்விதித்த
வேக னீசுந் தரர்க்கிருவ ரிடைப்பல் காற்சென் றலையெனிலிங்
கூக முளதென் றுய்த்துணரன் புடையார்க் கலது தெளிவுறுமோ
வாக யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (௯௮)

சம்பு நினது தியாகேசத் தலங்க டோறுஞ்சுந் தரரைக்கண்
டின்ப முறநேர் நினைப்போல விருத்தி யிலக்கி யவர்நீயே
யென்ப துணர்த்த வம்முணரார்க் கிடித்தோர்ப் பஃதுன் னருட்டிறனே
மன்பொன் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (௯௯)

வேண்டு வார்மன் வேண்டுவதே விழைவி னருள்வா யெனுஞ்சுருதி
யீண்டு நினக்கே சிறப்பாக வெளியேன் றிருமுன் வேண்டுவகை
கூண்டு மாவிங் கருள்கிலையென் குறையேற் சுருதிப் பொருளென்னே
மாண்ட யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (௧௦௦)

திருக்க பாடந் திறத்தலுமுட் சென்று நேர்காண் சிவசோதிப்
பெருக்கம் விழிகொள் ளாதுவாய் பெருகத் தூண்டு சுடருரைத்தாங்
கருக்கின் விளக்கெஞ் ஞான்றுநனி யவிர்சந் நிதியுற் றூர்க்கருளும்
வரத்த யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (௧௦௧)

தேக முதல நாமெனுமா நீர்ந்து தமைச்சித் தெனத்தெளிந்தவ்
வோகை மிகையான் மேனேக்கு முரணற் றகமே பிரமமெனு
மோக ருடன்சார்ந் தாணவமான் மூழ்கா தளித்த முழுமுதலே
வாக யாழைப் பழித்த மொழி மணாள வேத வனேசநம. (௧௦௨)

அடிமை யேனா நமின்மேலோ ராண்டா னுளனென் றடங்காத
தடிமை தாழ்மை தாராதகந்தை தருநாம் பரமென் றெழுமவரு
மிடரொன் றுறிற்செய் வனவிளக்கு மிறைநீ யெவரு மடியரெனல
வடிவல் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (கOஙு)

வேறு நெறிச்சா ராதத்து விதசித் தாந்த மெய்ந்நெறிச்சார்
பேறெற் களித்தா யிற்புகுத் தூண் பேணுர் போலச் சிவானுபவத்
தேற லருளாய் நீயெனிலென் செய்கேன் பாதந் திானருள்வாய்
மாறில் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (கOச)

அருள்செய் நினது திருக்கோயிற் கன்பு சீலங் கல்வியறி
வுரிய சிவாஅ கமநெறியே யொளிர்நீக் காதி யுறுஞ்சைவப்
பெரியர் விசாஅ ரணையென்றும் பிறழா தேர்ந்து மாவருள்வாய்
வரத யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (கOரு)

நித்த மாதி நின்கோயி னிகழ்த்து சிவதன் மாதிபச் சீர்
பத்தி யாதி சைவநெறிப் பண்பு மேற்கொண் டவர்க்கேயென்
அத்த மாக மத்துரைத்தாங் கொருவா தவர்க்கே யுறவருள்சீர்
வைத்த யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (கOசு)

நின்னு லயத்தின் மூன்றங்க நியம பூசா திகணடத்தும
வன்னே யஞ்சார் தூச்சைவ மரபிற் பெரிய ரவைநாளும்
பன்னு தாவின் மேன்மேலும் பல்கப் புரிந்தின் புறவருளாய்
மன்னோர் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (கOஎ)

ஐய நினது தனிக்குரிமை யாய பொருளெ லாமணுவு
மைய மின்றி யபிவிருத்தி நயப்ப நாளு மச்செயல்கள்
செய்ய வூக்கி யப்பெரியர் செயற்குத் துணையாய் முடித்தருள்வாய்
மையில் யாழைப் பழித்தமொழி மணாள வேத வனேசநம. (கOஅ



வேத வனச்சீர் வாழியருள் விளக்கம் வாழி மணிகன்னி
யாதி தீர்த்த குலம்வாழி யருள்செய் திருக்கோ யில்வாழி
மாதர் யாழைப் பழித்தமொழி மலர்த்தாள் வாழி வேதவன
நாத ரருட்டேன் பிரவகிக்கு நளினத் துணைகள் வாழியவே. (கOகூ)

வேதம் வாழி சிவாகமச்சீர் மிகுதி வாழி மெய்கண்ட
போதம் வாழி சந்தானம் பொலிந்து வாழி சரியாதி
பாதம் வாழி யாணவக்க பாடந் திறக்குந் தேவார
மாதி சுருதி வாழிபட ருதி மரபின் வாழியரோ (கக0)

வேத வனேசர் திருக்கோயின் மிளிர்கித் தியமா தியமூன் றுஞ்
சீத குணமன் பாசாரந் திகழப் புரியுஞ் சிவத்துவிசர்
சாத மரபு வாழிசிவ தரும கருத்த ராம்பெரியர்
நீதி யுறவக் கோயின்முறை நிகழப் போற்றி வாழியவே. (கககு)

வேதவனேசஸ்தவம் முற்றும்.